அன்பு மலர்-உசு

# சிவாஸ்திரம்

[செந்தமிழ் நாடகம்]



SHIVASTRAM
TAMIL DRAMA

சுவாமி சுத்தானந்த பாரதியார்
இயற்றியது



அன்பு நிலயம்
இராமச்சந்திரபுரம்
புதுக்கோட்டை சமஸ்தானம்




விலை : 8 அணா

# திருக்குற ளின்பம்

## (The Delight of Tirukkural)

நவமும் கலையும் ஒருங்கிணைந்த அடிகள், பேராறு மடைதிறந்து பாய்வது போல இன்சுவை யெழும் திருக்குற ளின்பம் எனும் இந்நூலை எழுதியுள்ளார். இந்நூல் படிக்கப் படிக்க மேன்மேலும் இன்பத்தை உண்டாக்கும். பழம் பெரு நூல்களிற் கண்ட அரும்பொருள்களைப் புதுமுறையில் அமைத்துக் காட்டி, இனிய எளிய நடையும், பொருட் செறிவும், மனத்தைக் கவரும் அமைப்பும் கலந்து விளங்கும் இந்நூல், தமிழன்பருக்குக் கிடைத்தற்கரிய விருந்தாகும். திருக்குறளின்பத்தை இந்த முறையில் எடுத்துக் காட்டியவர் இதற்குமுன் வேறு யாரும் இலர்.

திருக்குறளிலுள்ள விஷயங்களைப் பொது ஜனங்கள் இவ்வளவு தெளிவான இனிய எளிய தமிழில் சுவைத்தறிந்து வாழ்வில் அமைத்துப் பயன் பெறத் தக்க ஒரு உரைநூல் இஃதொன்றே யாகும்

ராப்பர் கட்டடம்: ரூ. 1—4 0
கலிக்கா கட்டடம்: ரூ. 1—12—0

அன்பு நிலயம்
இராமச்சந்திரபுரம்
புதுக்கோட்டை சமஸ்தானம்

அன்பு மலர் ௨

# சிவாஸ்திரம்

## (செந்தமிழ் நாடகம்)



சுவாமி சுத்தானந்த பாரதியார்
இயற்றியது






அன்பு நிலயம்
இராமச்சந்திரபுரம்

பதிப்புரிமை] ஏப்ரல் 1940 [விலை அணா 8

# SHIVASTRAM

(Tamil Drama)

*Price: As. 8*

*Published by*
THE ANBU NILAYAM
RAMACHANDRAPURAM TRICHY DT.

SHAKTI PRESS LTD., SHANTI PRESS, MADRAS.

# பதிப்புரை

எமது நிலயத்தின் இருபத்தாறுவது அன்பு மலரை இறைவன் திருவடியில் வைத்து வணங்குகிறோம். "சிவாஸ்திரம்" என்னும் இச் செந்தமிழ் நாடகம் அருச்சுனன் தவநிலையைப் பொருளாகக் கொண்டு சைவ வைணவ சித்தாந்த ரகசியங்களைக் கண்முன்னே துலக்குகின்றது. தெய்வத் தன்மை, அசுரத்தன்மை, முனிவர் பெருமை, மனித தருமம், வீரர் திறமை, கண்ணன் கருணை, தவயோக தியானசாதனம், வைராக்கியம், சிவபக்தி மகிமை, பரமன் கருணை, பஞ்சாக்ஷரி மகிமை முதலிய அரிய பெரிய விஷயங்களை இந்த நாடகம் விளக்குகிறது.

நமது புண்ணியபூமி தவப்பெருமை வாய்ந்தது. இங்கே தவயோகிகளுக்கே முதல்வணக்கம் செலுத்துகிறோம். அவர்களே நம்முடைய மறைகளையும், கலைகளையும் நன்னெறி யொழுக்கங்களையும், சமுதாய வாழ்வையும் வகுத்து வழிகாட்டினர். அவர்களே சமுதாயத்தைக் காத்துத் தருமத்தை நிலைநிறுத்த வீரதீரர்களைப் படைத்தனர். ஏகாந்த உபசாந்த சீலர்களான தவயோகிகள் கவலையற்று வாழ்ந்த காலத்திலேதான் நமது பாரததேசம் வெல்லொணா வீறு பெற்று விளங்கியது; கல்வி, தொழில், கலை, வாணிபம், அரசியல், அறநெறியொழுக்கம், வீரதீர பராக்கிரமம் அனைத்திலும் ஒப்புயர்வற்று விளங்கியது. அக்காலம் உண்டான அருள்நூல்களே இன்றும் நமக்கு வழிகாட்டுகின்றன. தவயோகிகள் தம்மைச்சுற்றி அருட்கனல் வீசினர். தம்மை யண்டிய அன்பருக்கு ஆத்மசித்தி யளித்தனர்; அரசருக்கு ராஜயோகம் பயிற்றி, ஆத்மஜயமும், திக்விஜயமும் அளித்தனர்; சமுதாய வாழ்வில் தெய்வப்பொலிவேற்றினர். நமது நாட்டின் மறுமலர்ச்சிகளுக்குப்

பின்னே தவயோகிகளைக் காண்கிறோம். இராமதாஸரின் தவக்கனலே சிவாஜியை ஆக்கியது. பரமஹம்ஸரின் யோக சக்தியே விவேகானந்தரை ஆக்கியது. தவசக்தியினலே தான் குருகோவிந்தன் தன் சீடர்களைத் தருமாவேச வீரராக்கினன். "தவம் செய்வார் தம் கருமம் செய்வார்." ஆத்மிக சித்திக்கு மட்டுமன்று, அரசியல் வெற்றிக்கும் தவம் துணையாகும். வியாசமுனிவரிடம் பஞ்சாக்ஷரி உபதேசம் பெற்று, இமாலயத்தில் தவம்புரிந்து, சிவபெருமானிடம் தெய்விகக் கணை வாங்கி, அருச்சுனன் பாரதப்போரில் கௌரவாசுரரை அழித்து அறத்தை நிலைநிறுத்தினன்.

வியாசபாரதம் வனபர்வம், வில்லிபாரதம், பாரவியின் கிரதார்ஜுனீயம், கீதை, சிவஞானபோதம் முதலிய நூல்களை ஆதாரமாகக்கொண்டு இந்த நாடகம் எழுதப்பெற்றது.

இப்புனித நூலை ஆர்வமுடன் அச்சிட்டுதவிய பெரியார், **நாச்சியார்புரம், பெரி. பெ. வயி. வயிரவஞ் செட்டியார்** ஆவார். இவர் சிவநேசமும், தமிழ் அன்பும், சீவகாருண்ய ஒழுக்கமும், அன்பு நிலயத்தில் அளவற்ற அன்பும் கொண்டவர். அறிவிலும், அனுபவத்திலும், வயதிலும் முதிர்ந்த இப்பெரியாரின் அறுபதாமாண்டு விழாவிற்கு இந்நூலை அச்சிட்டுதவும் பேறுபெற்றமைக்கு மகிழ்ச்சியடைகிறோம். இப்பெரியாருக்குச் சிவனருள் எய்துக!

இறைவனருளால், உள்ளன்பர் கூட்டுறவால், எங்கள் தமிழ்ப்பணி நாடோறும் தமிழருக்குப் பயனாகி, உலகில் தமிழின் பெருமையும், அருளடியார் பெருமையும் விளங்குக! ஓம் சிவம், ஓம் சக்தி!

விக்கிரமஞ்
வைகாசிமீ } அன்பு நிலயத்தார்.

# நாடக பாத்திரர்

1. பஞ்சபாண்டவர்: தருமன், பீமன், விஜயன், நகுலன், சகாதேவன்; திரௌபதை, குந்தி, சுபத்திரை.

   கண்ணன், வியாச முனிவர், விதுரன், மைத்திரேயர்.

   இந்திரன், பார்வதி, பரமன், அப்ஸரஸ்திரீகள்.

2. திருதராட்டிரன், துரியோதனன், சகுனி மாமா, துச்சாசனன், மூகாசுரன்.

3. படைத்திரள், வேடர், அந்தணர், முனிவர், சேவகர் முதலியோர்.

## இடம்:

ஹஸ்தினபுரி, காமிகவனம், இமயமலை, இந்திர லோகம்.

---

உ

# சிவாஸ்திரம்

## முதல் அங்கம்

### காட்சி க. மைத்ரேயி, விதுரன்

[ஹஸ்தினபுரிக்குப் போகும் வழியில் ஒரு காளுறு. சூரியோதயம் ஆகிறது. அதில் குளித்து சந்திஜபம் செய்து, மைத்திரேயர் சூரிய நமஸ்காரம் செய்கிருர்.]

**மைத்திரேயர் :**—ஓம் சிவசூர்யாய நம !

வாழக வுலக மெல்லாம், வாய்மையும் அறமும் வெல்க !
வீழக துயர்க்து லங்கள். விளங்குக சிறந்த நன்மை !
ஆளுக தெய்வ நீதி. அருளறி வின்ப மெங்கும்
சூழக ! சுத்த சக்தி துலங்குக வுள்ள மெல்லாம் !

சிவசூரியனே, நீ சுத்தன். உன் கதிர் சக்தி. நீயே உலகின் கண், ஒளி, சர்வபூத சாட்சி. நீ உதிக்காவிட்டால் ஒளி, வெப்பம், மழை, பயிர், உயிர்வாழ்க்கை இல்லே. ஒளியரசே, அறம்பொருள் இன்பம் வீடு ஆகிய நாற்பயனேயும் அருளும் அருட்சுடரே, உள்ளத்தின் உயிர்க்கனலே, மாந்தர் மனவிருளே நீக்கியருள் ! உன்கதிர் சரிநிகர் சமானமாக எல்லாருக்கும் பரவுகிறது. அதேபோல நீ வளர்க்கும் உலகிலும் சமரஸ சன்மார்க்கம் பரவுக ! உலகின்

சிற்பியே, மனிதவியல்பின் கோணல்களை ஒழி! அழகும் அருளும் உயிர்வாழ்விற் பொழி! ஓம் சிவசூர்யாய நம.!

[வணங்குகிறார்.
விதுரன் வருகிறான்]

**விதுரன் :** ஓம் நமோ நாராயணாய!

புண்ணியப் புலவர் புகழ் ஓங்கவே!
கண்ணிலாக் கயவர் துயர் வீழ்கவே!
மண்ணி லின்னுயிர் வாழ்வு செழிக்கவே!
கண்ணன் காரியங் காணுக வெற்றியே!

ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண....க்ருஷ்ண க்ருஷ்ண ஹரே ஹரே....!

**மைத்தி :** ஆ.......விதுரரா.......எங்கே கிளம்பினீர்?

**விதுரன் :** நமோ நம.......காட்டிற்கு! தேவரீர்?

**மைத்தி :** நாட்டிற்கு. காட்டில் என்னவேலை? தாங்கள் சாதுவாயிற்றே.

**விதுரன் :** சாதுக்களுக்குத் துரியோதனன் நாட்டில் என்னவேலை? பாண்டவர் இருக்கும் காடுதான் சாதுக்களுக்கு நாடு. துரியோதனன் இருக்கும் நாடெல்லாம் சாதுக்களுக்குப் புலிநரிக்காடாகும். முனிபுங்கவர் ஹஸ்தினபுரியை நோக்குவானேன்? அந்தணரும் முனிவரும் தருமபுத்திரருடனே தான் இருக்கின்றனர்.

**மைத்தி :** நானும் அங்கிருந்துதான் வருகிறேன்.

**விதுரன் :** பசுவுக்குப் புலிப்புதரில் என்னவேலை? அன்னத்திற்குக் கழுகிடம் என்ன நன்மையுண்டு?

**மைத்ரி:** விதுரரே, நீர் தருமாத்மா. உம்மைக்கூட அந்தக் கொடியன் இப்படி மனம் புண்ணுகும்படி செய்தானு....ஹா! உம் தமையனுன திருதராஷ்டிர னிடம் இந்த அக்கிரமங்களை யெல்லாம் சொல்ல வில்லையா?

**விதுரன்:** சொன்னேன் முனிவரே, சொன்னேன்! "அண்ணு, தருமபுத்திரரை மாயச்சூதில் மடக்கி அரசைப் பறித்து அவமானப்படுத்திக் காட்டில் ஓட்டினுன் உன் பிள்ளை துரியோதனன். தரும மும் அவர்களுடன் சென்றது. நல்லோரெல்லாரும் 'இப்படி அநியாயம் உண்டா!' என்று கண்ணீர் வடித்துப் பாண்டவரை நாடுகிருர்கள். அறமும், அன்பும், சாதுக்களும் இல்லாத நாடு சுடுகாடு தான்! உனது நாட்டையும் குலத்தையும் கெடுக்க வந்தான் இந்தத் துரியோதனன்....அசுரப்பதர்! பிறக் கும்போதே இவனைத் தொலைத்துத் தலைமுழுகச் சொன்னேன். காலகோடி சர்ப்பம்போலே வளர்ந்து, குருகுலத்திற்கே எமனுக வந்தான், பாவி. அண்ணு, என்ன கொடுமை! வீட்டுக்கு விலக்கமாயிருக்கும் தருமபத்தினியை, அரசர்சபையில், தம்பியைவிட்டு இழுத்து வந்து, துயிலுரிந்தானே மஹாபாவி! இந்த மாதிரிக் கொடுமை, அடிமடத்தன்மை, அயோக்கியத் தனம், போக்கிரித்தனம் உலகில் எங்காவது உண்டா? பகவான், கருணுமூர்த்தியான கண்ணன் அருளால் பாஞ்சாலியின் மானம் அன்று காக்கப்பெற்றது. தூ, தூ, தூ! இப்படியும் ஓர் அதர்மப்பதர் குருகுலத் தில் தோன்றினனே! அண்ணு, பேசாமல் உடனே தருமபுத்திராதிகளை வரவேற்று நாடாளச் சொல்!

இந்த அதர்ம ராக்ஷஸனுடைய பாம்புக்கொடியைச் சுட்டுச் சாம்பலாக்கி, ஹஸ்தினபுரியில் மீண்டும் அறக் கொடியை நாட்டு!" என்று படித்துப்படித்துச் சொன்னேன்.

**மைத்ரி:** ந்யாயமாகவே சொன்னீர். உம்மிடம் உள்ளொன்று வெளியொன்றில்லை. துரியோதனனுக்கும் புத்திசொல்லி யிருப்பீரே; உமது சொல்லைக் கேட்டாரா?

**விதுரன்:** இந்தக் குருடனும் கேளான்! அந்தக் கொடியனும் கேளான்! "பாண்டவர்களும் உன் குழந்தைகள்தாமே. அவர்களை அன்புடன் நடத்து" என்றேன். 'அது சரிதான். துரியோதனன் என் சொந்தப்பிள்ளை யல்லனு? அவனை நான் எப்படி....'வழ வழ என்று பேசி 'நீர் இருந்தால் இரும், போனல் போம்' என்று சொல்லிவிட்டான். "ஹா க்ருஷ்ணு, நீதான் இவர்களுக்குப் புத்தி சொல்லவேண்டும். ஏழைசொல் அம்பலம் ஏறவில்லை" என்று இரண்டு சொட்டு இரத்தக்கண்ணீர் விட்டு, இதோ பாண்டவரை நாடிச் செல்லுகிறேன். இனி நான் அந்த அசத்திய, அதர்ம, அக்கிரம ஹஸ்தினபுரிக்கு வருவது கண்ணன் செயலே.

**மைத்ரி:** விதுரரே, இதோ நான் சென்று அந்தத் துரியோதனனுக்குத் தக்க புத்தி சொல்லுகிறேன். அதற்காகவே புறப்பட்டேன்.

**விதுரன்:** உங்கள் தபோபலம் வலுவானல் பாருங்கள். பாம்பை அமுதகலசத்திலிட்டாலும் அதன் நஞ்சு

போமா? அவன் யாரையும் மதிக்கமாட்டான். அவனுக்குப் பிரியமானவர் சகுனி துச்சாதனர்.

**மைத்ரி:** என்னால் முடிந்ததைப் பார்க்கிறேன். நாட்டில் அதர்மம் நடந்தால் அதைத் தைரியமாக நேருக்கு நேரே எடுத்துச் சொல்லித் தருமத்தைக் காப்பது நமது கடமையல்லவா? எனது கடமையைச் செய்கிறேன். பலனைச் சிவபெருமானுக்கு நிவேதிக்கிறேன். இப்போது துரியோதனன் என்ன செய்து கொண்டிருப்பான்?

**விதுரன்:** அவனுக்கு வேலையென்ன? மாமா ஒருவன் இருக்கிறானே இல்லையோ! அவனுடன் குடித்துக்களித்துக் கட்டிப்புரண்டு களியாட்டமாடிக் கொண்டிருப்பான்....போய்ப்பாருங்கள்!

**மைத்ரி:** இதோ விரைவாகச் செல்லுகிறேன். நீரும் சீக்கிரம் அங்கே வருவீர் பாரும்....உமது நியாயத்தையும் சொல்லுகிறேன். ஓம் சிவம்!

**விதுரன்:** நமோ நாராயணாய!

[இருவரும் செல்லல்.]

## காட்சி உ. துரியோதனன், சகுனி

[துரியோதனன் உல்லாச மண்டபம். பாண்டவரைக் காட்டிற்கு ஓட்டி, சகுனி துரியோதனர் பொங்கி மகிழ்தல்.]

**துரியோதனன்:** மாமா ஹ, ஹ, ஹ! நல்லபோடு போட்டாய்!

**சகுனி:** யோக்கியா? ஹ, ஹ, ஹ நல்ல வேலைசெய்தாய்!

துரி: உன்னை மாமா என்பது எவ்வளவு பொருத்தமா யிருக்கிறது!

[கழுத்தைக் கட்டிப் புரளுகிறான்]

சகுனி:— உன்னை "யோக்கியா" என்றால் உலகமெல் லாம் தலையாட்டும்.

துரி: சனிமாமா....மாமா....உன்னை அப்படியே அப்பம் மாதிரிச் சாப்பிடவா?

[கன்னத்தைக் கடிக்கிறான்]

சகுனி: அட சும்மா இருடா; என்னை என் 'சனி' என் கிறாய்? நீயல்லவா அந்தத் தருமப்பூச்சிக்குச் சனி யனாய் வந்தாய்?

துரி: மாமா மாமா உன்னைப் பார்க்கப் பார்க்க இன் பம் சனிக்குதடா! 'கு' என்றால் அந்தக் குண்டோதர பீமன் நினைப்பே வருகிறது. அதனாலேதான் அந்த எழுத்தை நீக்கிவிட்டேன். நளனைப் பொட்டலாக்கிய புஷ்கரன்கூட உன்னிடம் பிச்சை வாங்கவேண்டும்— நீயே சூதர் சிங்கம். சபாஷ் மாமா! எனது ஜன்மப் பகைவரை, ஒரு சொட்டு இரத்தம் சிந்தாமல், கத்தி யெடுக்காமல், சொக்கட்டாங் காயினால் ஓட்டாண்டி களாக்கினாயே. சபாஷ் மாமா, சபாஷ், சபாஷ்!

[முதுகில் பளாரென்று நாலு அடி அடிக்கிறான்]

சகுனி: அட யோக்கியா, என் முதுகென்ன டமாரமா?

துரி: உன் முதுகு என் வெற்றி முரசு, உன் மூளை என் செங்கோல்! மாமா, என் சிறுமை தீர்த்தது உனது

சொக்கட்டான்காய். அதை உருட்டிய உனக்கு ஒரு கட்டிமுத்தம்.

[கட்டி முத்தமிடுகிறான்]

சகுனி: அட விடுடா! உன் மீசை ஊசிமாதிரிக் குத்துகிறது.

துரி: உன்னை விடுவேனா? நீ பெண்ணாயிருந்தால் அப்படியே....ஹ ஹ ஹ! என்னைக் கண்டு சிரித்தவளைச் சபைசிரிக்க, அழ வைத்தாயேடா! மாமா நீயே என் தெய்வம். சனிமாமா, உன்னைக் குதிரை தூக்கவா? இந்தா ஏறு.

[குதிரை தூக்குகிறான்]

சகுனி: போதுமடா யோக்கியா! இவ்வளவு பாடுபட்டும் உன் காரியம் நிறைவேறவில்லையே? அவள் சேலை வளர்ந்தது. தம்பி கை தளர்ந்தது. ஐவர்கோபம் கிளர்ந்தது. எல்லாரும் உன்னைத் திட்டுகிறார்கள்.

துரி: "மடிமேல் உட்கார்" என்றேனா இல்லையா? அதுபோதும். அதுவும் அந்தக் குண்டோதரன் முன்னே. அவன் கதை புளியங்காய்ப் பறிக்கப்போய் விட்டது. அந்த வில்லாதிவில்லன் வில்லும் தூங்கிக் கொண்டிருந்தது. அப்பாவி தருமண்ணா சாது, பசு; அடித்தாலும் அழமாட்டான்!

சகுனி: மகா யோக்கியா, அந்தப் பசுவுக்கு நீ புலியாக வந்தாய்!

துரி: பசுவைப்பற்றிக் கவலையில்லை மாமா. அதைக் கோமேதயாகம் பண்ணிவிடுவேன். அவன் வேதாந்தத்தைக் கேள்:— அடித்தவரைத் திருப்பியடிக்காதே.

வைதவரை வாழ்த்து. சோறு திருடினவனுக்கு நெய்யும் கொண்டுபோய்க் கொடு. வலக் கன்னத்தில் அடித்தால் இடக் கன்னத்திலும் வாங்கிக்கொள். செருப்பைத் திருடினுல் தலைப்பாகையுங் கொடுத்துவிடு. ஊரைவிட்டுத் துரத்தினுல் உலகை விட்டே ஓடிப்போ. அயலான் புகுந்து பெண்சாதியை இழுத்தாலும் 'அதுவும் தெய்வச்செயல்' என்றிரு. எது வந்தாலும் தருமம் கருமம் கடவுள் என்றிரு. பள்ளிக்கூடத்தில் நாங்கள் படிக்கும்போதே அவன் வேதாந்தமெல்லாம் எனக்குத் தெரியும். அந்தப் பிமேத் தடியனைக் கண்டாலேதான் எனக்குப் பகீர் என்கிறது.

**சருலி :** எல்லாரையுந்தான் ஊரைவிட்டுக் காட்டிற்கு முடுக்கினுயே. இனிப்பயமென்ன ?

**தூரி :** அவன் சங்கதி உனக்குத் தெரியாது மாமா. பலே எத்தன்! கேள் :—அந்தப் பயல் சிறுவயதில் என்னைத் தூக்கிக் கர்லாக்கட்டை போடுவான். அவனை ஒரு நாள் மூச்சுப்போக ஆற்றில் ஆழ்த்தினேன் ; தப்பிவிட்டான். தூங்கும்போது கட்டிக் கங்கையில் போட்டேன். கட்டுகளை அறுத்து நீந்திக் கரைக்கு வந்து திசையதிர முண்டாத் தட்டினுன். கொடிய விஷப்பாம்புகளைக் கடிக்கவிட்டேன். புழுக்களைப் போல அவற்றைக் காலால் நசுக்கிவிட்டான். சோற்றில் நஞ்சுவைத்துக் கொடுத்தேன். அத்தனையும் அள்ளிவிழுங்கி ஏப்பம் விட்டான். ஒருநாள் இனிய நஞ்சைக் கொடுத்து மயக்கி, அவனைக்கட்டிக் கங்கையிற் போட்டேன். ஒழிந்தான் குண்டன் என்றிருந்தேன். பேர்வழி நாகலோகம் போய் நாககன்னிகை

யுடன் சல்லாபம் செய்து, குடங்குடமாக அமுதம் உண்டு, பதினுயிரம் யானை பலத்துடன் வந்து குதித்தான். வாரணவதத்தில் அரக்குமாளிகை கட்டினேன்; அதில் தருமப்படைகள் இரவில் தூங்கும் போது தீ வைத்தேன். அரக்குமாளிகை நிமிஷம் வெந்து போனது. பேர்வழிகள் ஒழிந்தார்கள் என்று கருமாதி நடத்தக் கங்கைக் கரையில் கூடியிருந்தேன்; என்னப்பன் குருட்டுக்கிழவன், அந்தப் பிரமசாரித் தாத்தா பீஷ்மன் எல்லாரும் 'ஹோ'வென்று அலறினர்.

சகுனி : பெரியார் தருமபுத்திராள் போனுல் உலகில் சூரியனே உதிக்காமல் போய்விடுமே என்று அழுதனர்.

துரி : "பெரியார்" என்ருல் எனக்கு எங்கோ எரிகிறது மாமா. 'பெரியார் பெரியார்' என்று எல்லாரும் என் வாயில் மண்ணைப்போடுகிருர்கள். இந்தப் பாண்டுப்பதர்கள் தீயில் விழுந்து ஒழிந்தன என்று கொஞ்சகாலம் சந்தோஷமாயிருந்தேன். ஒருநாள் அத்தனைப் பேர்களும் மாப்பிள்ளைக் கோலத்துடன் வந்து "கொடு என் அரசை" என்று கேட்டார்கள். வயிற்றெரிச்சல்!

சகுனி : அரக்குமாளிகையி லிருந்து எப்படித் தப்பினர்கள்?

துரி : எல்லாம் பெரியார் செய்த சூழ்ச்சி. இந்த விதுரக் கிழவன் அரக்குமாளிகை கட்டின கனகனைத் தன் மாமூல் கதைகளைச் சொல்லி வசப்படுத்தி, அடியில் ஒரு சுரங்கம் கட்டுவித்தான். தீப்பிடித்த

தும் நமது குண்டோதரன், தம்பி தமையன் எல்லாரையும் கையிலும் தோளிலும் வாரியணைத்துக்கொண்டு சுரங்கத்தின்வழியாக ஒரே ஓட்டமாக ஓடிக் கங்கைக் கரையை அடைந்தானும். அங்கே விதுரக்கிழம் ஒரு கப்பல் தயாரித்து வைத்திருந்ததாம். அதில் ஏறி அக்கரை சென்று காட்டிற்குள் ஓடித்தப்பினர்கள் என் ஜன்மவிரோதிகள். நான் பலதிசையிலும் ஒற்றரை ஏவினேன். எல்லார் விழியிலும் அந்த ஐந்து பேர்வழிகள் பொடி தூவி விட்டார்கள். பீமன் என்னசெய்தான் தெரியுமா? காட்டில் இடும்பாசுரனைக் கொன்ருன். அவன் தங்கை இடும்பியம்மாளைக் கூடினுன்; கடோர்கஜன் என்ற ஒரு தடிப்பிள்ளையைப் பெற்றுவைத்துச் சென்ருன். எப்படியிருக்கிறது செய்தி!

**சகுனி:** பிறகு எப்படி அவர்கள் ஹஸ்தினபுரம் வந்தார்கள்? துரியோதன பாரதம் இனிமையாயிருக்கிறது.

**துரி:** கேள் மாமா! எனது ஒற்றரை அந்தப்பயல்கள் ஏமாற்றி பிராமண வேஷம்போட்டு, சாலியகோத்திர மஹரிஷியிடம் வேதம் கற்ருர்கள்; பிச்சை எடுத்துத் தின்ருர்கள். அப்போதும் இந்தத் தடியன் கொழுப்பு அடங்கவில்லை. பகாசுரனை நாக்குப்பிதுங்கக் குத்தி எள்ளுருண்டைமாதிரி உருட்டித் தள்ளிவிட்டான். பிறகு எல்லாரும் பாஞ்சாலதேசம் சென்ருர்கள். அங்கே திரௌபதை சுயம்வரம் நடந்தது. நொட்டாங்கை வில்லன், சுயம்வரத்திற்கு வைத்திருந்த மச்சயந்திரத்தை ஒரேகணையில் உடைத்தெறிந்தான்.

**சகுனி:** அந்தப் பாஞ்சாலி ஐந்துபேருக்கும் பெண்சாதியானதெப்படி?

துரி : குந்தியிடம் காண்டீபப்பேர்வழி, 'அம்மா நான் ஒரு நல்ல கனிகொண்டு வந்திருக்கிறேன்' என்றானும்; 'ஐந்துபேரும் சாப்பிடுங்கள்' என்றாளாம் குந்தியம்மாள். இந்த அம்மா பிள்ளைகள் ஐந்துபேரிடம், அந்த ஒரு பெண் அகப்பட்டுக்கொண்டாள். நானும் சுயம் வரத்திற்குப்போய் வில்லை வளைத்தேன். கர்ணனும் வில்லை எடுத்தான். அவனைத் தடுத்தான் வைதீகப் பாஞ்சாலன். சல்லியன் ஜராசந்தன் கர்ணன் நான் எல்லாரும் வயிற்றெரிச்சல் பொறுக்காமல் போர் தொடுத்தோம். பகல்வேஷப் பேர்வழிகள் கைதான் வலுத்தது. நாங்கள் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு வந்தோம். இங்கேயும் அவர்கள் வந்துவிட்டார்கள். இந்தப் பயல்களுக்குக் கருமாதி செய்த நான், இவர்களைக் கலியாண மாப்பிள்ளைகளாகக் கண்டதும் ஐயோ என்ன பாடுபட்டேன் தெரியுமா?

சகுனி : பிறகு அவர்கள் எப்படி அரசை அடைந்தார்கள்?

துரி : ஐயோ அந்தப் புராணக்கிழடு இருக்கிறதே, வியாசர், அதுவும் விதுரக்கிழமும் அவர்களைக்கூட்டி வந்து இந்தக் குருட்டுக்கிழவனிடம் நியாயம்பேசிப் பாதியரசு வாங்கிக்கொடுத்து, இந்திரப்பிரஸ்தம் ஸ்தாபிக்கச் செய்தார்கள். என்வாயில் விழும் மண்ணெல்லாம் பெரியவாள் கைப்பிடி மண்ணே.

சகுனி : அடயோக்கியா, நீதான் இந்திரப்பிரஸ்தத்தைக் கைப்பற்றிக்கொண்டாயே இனியென்ன?

துரி : எல்லாம் உன்னாலேதான் மாமா. உனக்குமிஞ்சிப் பெரியவாளில்லை. உன்னாலேதான் நான் மீசைவைத்துக்

கொண்டிருக்கிறேன். நான் மண்டை, நீ மூளை. நான் அஞ்சிய பஞ்சவரைப் பஞ்சைகளாக்கியது உன் பகடையல்லவா? என் பாம்புக்கொடியில் சொக்கட்டாங்காய் போடுகிறேன். அதில் 'சனிமாமா' என்று எழுதி வைக்கிறேன். நீ புலி. உன்னை வாலுருவிவிட்டால் அந்தப்பசுவை உண்ணுமல் விடுவாயா? இருந்தாலும் அன்று அவள் சிரித்தாளே அந்த வயிற்றெரிச்சல் இன்னும் தீரவில்லை மாமா?

[வருகிருன் துச்சாதனன்]

**துச்சாதனன்:** இன்னொரு பெரிய வயிற்றெரிச்சல் வந்திருக்கிறது! அண்ணு வணக்கம்!

**துரி:** தம்பி வா, என்ன செய்தி?

**துச்:** அண்ணு, அப்பா ஆள்விட்டார்; விதுரக்கிழம் திரும்பி வந்துவிட்டது. ஒரு முனிவரும் வந்திருக்கிருர்.

**துரி:** ஐயோ வந்துவிட்டதா. இனித் தலைவலிதான்; உபதேசந்தான். முனிவர் வேறு! தாடி எத்தனை முழம்? தாடிவளர்த்துச் சாம்பலைப்பூசிய பேர்வழிகளெல்லாரும் நமக்குப் புத்திசொல்ல வந்துவிடுகிருர்கள்.

**துச்:** அப்பா உன்னை அழைத்துவரச்சொன்னுர்.

**துரி:** தலைக்குப் பற்றுப்போட்டுச் செல்லுகிறேன். கிழட்டு உபதேசங்கள் காதைத் துளைக்கும். தம்பி இந்தப்புறம்! மாமா வலப்புறம்!

[இருவரையும் அணைத்துச் செல்லுகிருன்]

## காட்சி ௩. முனிவர் சாபம்

[திருதராஷ்டிரன் ஆஸ்தானமண்டபத்தில், அரியணையில் அமர்ந்து சிந்திக்கிருன்.]

**திருதராஷ்டிரன் :** ஆ, விதுரன் சென்ருன், வியாசரும் சென்ருர்! "குருவம்சம் வாழவேண்டுமா, போரில் மடிய வேண்டுமா? வாழவேண்டுமாளுல் துரியோதனனை அடக்கு. பாண்டவருக்கு உரியதைக் கொடுத்து மரியாதை செய்" என்று வியாசர் முடிவாகச் சொல்லிச் சென்ருர். விதுரன் சதுரன், அன்பன், சத்தியவான், நியாயவான். அவனையும் மரியாதையில்லாமல் போகச்சொன்னேனே. சஞ்சயனை அனுப்பியுள்ளேன். விதுரன் திரும்பி வந்தாலே ஆறுதலாகும். ஆ, கண்குருடாளுல் என் காதும் செவிடா? இவ்வளவு பெரியோர் சொற்களும் என் காதில் ஏருததென்ன? ஆ! புத்திரபாசமே, உன்ளுல் தருமதேவதையிடம் சவுக்கடி படுகிறேன். துரியோதனு! துரியோதனு!

[துரியோதனனும் சகுனியும் ஓடிவருகிருர்கள்]

**துரி :** அப்பா, அப்பா! ஏன்? உடம்பு வலிக்கிறதா?

**திருத :** மகனே, உடம்பில்லை, மனந்தான் வேதனை செய்கிறது. கண்மணி, உன்னை எல்லாரும் பழிக்கிருர்கள். பாண்டவரை ஏனப்பா அப்படிக் காட்டிற்கனுப்பிளுய்? சாதுக்களெல்லாரும் அவர்களிடம் போய்விட்டார்களே.

**துரி :** அப்பா, இந்தத் தலைவலி வேண்டாமென்று முன்பே சொன்னேனே. எனக்குப் புத்தி சொல்லும் மடையர்களெல்லாரும் கட்டோடு காட்டிற்குப் போய்

ஒழியட்டும். நான் உலகாளுவதில் உனக்கும் பொறு மையா ?

திருத: இல்லையடா கண்ணே; தருமம், நியாயம் பார்த்து நடக்க வேண்டாமா?

துரி: அதெல்லாம் பார்த்துத்தானே அந்த அம்மா பிள்ளை கள் வனவாசம் போனார்கள்.

திருத: அம்மா பிள்ளைகளாவது, அப்பா பிள்ளைகளாவது? பேசாமல் அவர்களுக்கு உரியதை அவர்களிடம் கொடுத்து, உலகப்பழிக்குப் பயந்து நடக்கவேண்டு மடா கண்மணி! வியாசபகவான் அப்படியே சொல் லுகிறார். அவர் மஹாபாரதம் எழுதுகிறார், கவனம். காலமுள்ளளவும் உலகம் உன்னைப் பழிக்கும்படி செய்துவிடுவார். கவிகள் கோபம் உதவாதப்பா!

துரி: அப்பா, எனது செங்கோலில், மாமா பாரதம் எழு தினால் ஒப்புக்கொள்வேன். வியாசரும் கீசரும் எழுதினால் ஒப்புக்கொள்ளமாட்டேன். ஏட்டைக் கிழித்தெறிவேன். எனது நியாயத்தை விளக்கி, அம்மா பிள்ளைகளின் அநியாயத்தை உலகறியச் செய்யவேண்டும். அதுவல்லவா நல்ல பாரதம்?

[சகுனிக்குச் சாடை காட்டுகிறான்]

சகுனி: ஹ, ஹ, ஹ....அது நியாயமான பேச்சு.

திருத: அது யார் சிரிக்கிறது?

துரி: மாமாதான்.

சகுனி: நமஸ்காரம்.

திருத : மஹாராஜனுயிரு.

துரி : அதென்னப்பா, நான்தான் மஹாராஜனு யிருப்பேன், மாமா உம்.

[ஜாடை காட்டுகிறுன்]

சகுனி : பெரியவாள் ஒரு சந்தேகம் தீர்க்கவேண்டும்; பாண்டவாள் பாண்டுபெற்ற பிள்ளைகளா? குந்தி பெற்றுக்கொண்ட பிள்ளைகளா?

திருத : மந்திர சக்தியால், தேவதைகள் மூலம், குந்தி பெற்ருள். காது வழியாகக் கர்ணன் வந்தான்.

துரி : ஹ, ஹ, ஹ! இதென்ன மூட நம்பிக்கை அப்பா! காது வழியாகப் பிள்ளைவருமா? மந்திரத்தாலே மசக்கை காணுமா? தேவதைகள் பேரைச் சொல்லிக் கொண்டு ஜனத்தொகை வளர்ந்தது.....அப்புறம் மாமா சொல்லட்டும்.

சகுனி : பாண்டவாள் குந்திபிள்ளைகளேயொழிய பாண்டு புத்திரரல்லர்; கௌரவர், விசித்திரவீரியன் பிள்ளையான தங்களுக்கே பிறந்தவர்; மூத்தவன் நமது யோக்கியன்; ஆதலால் அரசுரிமை இவனுக்கேயுண்டு.

துரி : அப்படிச் சொல்லு மாமா, அதல்லவா சரியான பாரதம்!

திருத : நான் அவர்களையும் சொந்தப்பிள்ளைகள்போலே நேசிக்கிறேன். அவர்களும் பாதி ஆளட்டுமே?

துரி : அப்பா! நீ அவர்களைப் பிள்ளைபோல நேசிக்கிருய். உன்பிள்ளையை அவர்கள் எமன்போலப் பார்க்கிருர்கள். பள்ளிக்கூடத்தில் படித்தநாள் முதல் எனக்கும்

அவர்களுக்கும் ஏழாம் பொருத்தம். என் மூளையி லேஏருத படிப்பையெல்லாம் அந்தப்பயல்கள் நிமிஷம் கற்றுக்கொண்டு, உபாத்தியாயரிடம் எனக்கு முட் டாள் பட்டம் வாங்கித்தருவார்கள். இப்போதும் எனது அரசை நான் ஆளுகிறேன். அவர்களுக்குப் பொறுக்கவில்லை. எனக்குப் போட்டியாக ராஜ சூயயாகம் செய்தார்கள். மலைமலையாக முத்தும் பொன் னும் பொருளும், வரிசை வரிசையாக அணிமணிகளும் ஆடையும், பண்டமும், பச்சையும், பவளமும், பத்தி பத்தியாகக் குதிரையும், யானையும், வண்டியும், வாகன மும் கொண்டு திசைதிசை மன்னர்கள் அந்தக் கையாலாகாத தருமனுக்குச் சிறப்புச் செய் தனர். இந்த நாட்டிற்குரிய மன்னன் நான், நான், துரியோதனச் சிங்கம் மலைபோல வீற்றிருந்தேன். என்னைத் துரும்புபோல நினைத்தான் தருமன். இடை யனுக்கு முதல் தாம்பூலங்கொடுத்தான். என் வயிற் றெரிச்சல் எரிமலையானது!

திருத : அப்படிச் சொல்லாதே மகனே. கண்ணன் அவ தாரம்; பாண்டவர் பக்கம் இருக்கிறன்; அவர் களுக்கு வெற்றி தருகிறன்.

துரி : அப்பா இந்த அவதாரப் புரட்டையெல்லாம் நான் நம்பமாட்டேன். அவன் பக்காப்பேர்வழி. இந்தக் கரியனுக்கேற்ற கருப்பன். மேகவர்ணனும். ஆடு மேய்க்கும் இடையன். சகடனுவைக் காலால் உதைத்தான். குழந்தை யென்று முலைகொடுத்த பூதகி பிராட்டியின் உயிரை உறுஞ்சினன். தேனுமச்சானைத் தூக்கி விசிப் பழம் உதிர்த்தான். கம்சனுவை மார்பிலே குத்தி எமலோகத்திற்கு அனுப்பிவிட்டான்.

சராசந்த மாமாவை வாழைமட்டை போலே உரித்துக் கொன்ருன். நரகண்ணுவை நசுக்கிஞன். இப்போது என் கழுத்தில் கத்திவைக்க அந்த அம்மா பிள்ளை களுக்குத் தூபம் போடுகிருன்.

திருத : அதிகப் பிரசங்கித்தனமாகப் பேசாதேடா.—கண் ணன் மஹாத்மா!

தூரி : நானும் மஹாத்மாதான். எடைபோட்டுப் பார்த் தால் தெரியும். சிறைகாத்த தேவகி வசுதேவருக்குப் பிறந்து, நடு ராத்திரியில் தப்பி, யசோதையிடம் வளர்ந்து, வீடுவீடாக நுழைந்து, வெண்ணெயைத் திருடி விளையாட்டுப் பயல்களுக்குத் தந்த கள்ளன்; கோபிகள் புடவையை ஒளித்து அவமானம் செய்த போக்கிரி; இரவில் குழலூதி யமுனைக்கரையில் கோபி களைக் கூட்டிவைத்து ராசலீலையாம் என்னவோ செய்த எத்தன்; உருக்குமணியைத் தூக்கிச் சென்றவன்; பலராமண்ணுவை ஏமாற்றித் தங்கை சுபத்திரையை என் பிரதிவாதி அருச்சுனனுக்குக் கொடுத்தவன்; தானங்கொடுத்த மாவலியைத் தலையிலேறி மிதித்து நசுக்கிய குள்ளன். தூண்பிளந்து சிங்கமாக வந்து இரணியத்தாத்தாக் குடலைக்கிழித்த கொடியன். நான் பகைவரை ஒழிக்கப் பகடையுருட்டும்போதெல் லாம் எப்படியோ என் சூழ்ச்சிகளைக் கெடுக்கும் எதி ராளி........இன்னும் சொல்லட்டுமா?

திருத : போதுமடா. சிசுபாலன் இப்படித்தான் திட்டி ஞன். கண்ணன் வெற்றிலைத்தட்டை யெறிந்து அவ னைக் கொன்ருன்.

துரி: உள்ளத்தைச் சொன்னல் உடம்பெரிச்சல். தனக்கு ஆகாத பேரையெல்லாம் அந்தப் பேர்வழி ஏதாவது சாக்குச்சொல்லிக் கொல்லுகிருன். தாடிவளர்த்த முனிவர்களெல்லாரும் அவனை ஆகாசத்திற்கும் பூமிக்கும் புகழ்கிருர்கள்.

திருத: ஆமடா வம்பா! அது சரி. இன்று மைத்திரேயர் வருவதாகச் சொல்லியனுப்பினுரே. இன்னுமேன் வரவில்லை?

துரி: தவம் பண்ணிப்பண்ணிப் பேரிச்சங்காய்போலே உடம்பு சுருங்கிப்போனது; முதலில் வயிற்றுப்பாட்டைப் பார்த்துவிட்டு வாரும் என்று அனுப்பினேன். தவம் செய்து உயிரை விடுவதைவிடத் தாட்டாய்ச் சாப்பிட்டிருப்பதே நலம் என்று அவர் இன்று அறிவார். ஆ! இதோ வருகிருர்.

[வருதல் மைத்திரேயர்]

மைத்தி: ஓம் நமசிவாய!

துரி: [பின்னுல் திரும்பி] வரவேண்டும். இப்படி உட்கார வேண்டும். பிக்ஷை திருப்தியாக நடந்ததா?

மைத்தி: ஆஹா! (அமர்ந்து துரியோதனைப் பார்த்து, முகம் சுளித்துப் பிறகு திருதாாட்டிரனை நோக்கி) தீர்க்காயுஷ்மான் பவ.

திருத: ரிஷிபுங்கவருக்கு சாஷ்டாங்க நமஸ்காரம்!

மைத்தி: தர்மம் வெல்க! அதர்மம் வீழ்க! (ஒருபுறமாக) இந்த மாளிகை தீ வீடுபோல் எரிகிறதே. அறமும், ஆற்றலும், வீரமும், கலையும், அறிவும், கற்பும் அங்கே

காட்டில் வருந்துகின்றன. செருக்கும் சூதும், பொய்யும், கொடுமையும், ஆசையும், வஞ்சமும் நாட்டையாளுகின்றன. ஈசனே!

துரி: அடிகள் என்ன யோசிக்கிறீர்கள்?

சகுனி: முக்காலவிசாரம் நடக்கிறது. பேசாமலிரு.

திருத: முனிபுங்கவரே, தருமரும் தம்பிமாரும் திரௌபதையும் சௌக்கியமா?

மைத்தி: ஆஹா, ஈசனருளால் எக்குறையும் இல்லை. பரமானந்தமா யிருக்கிறார்கள்.

துரி: ஐயையோ! வயிற்றெரிச்சலைக் கிளப்புகிறாரே. முனிவரே அவர்களுக்குத் தலைகால் வலிக்கவில்லையா? வறட்டுக்காட்டில் சோற்றுக்கென்ன செய்கிறார்கள்? பீமன் உடல் ஒரு சுற்றுவது வற்றவில்லையா?

மைத்தி: அந்தண் முனிவரெல்லாரும் தருமபுத்திரருடனேயே இருக்கிறார்கள். அவர்களுக்கு உணவுவேண்டுமென்ற கவலைகூடக் கிடையாது.

துரி: என்ன நித்திய வாயு பக்ஷமா? பீமனுக்கு அதெல்லாம் சரிவராதே. மலைவிழுங்கி மஹாதேவனுக்கு அண்ண னல்லவா?

மைத்தி: அரசே, சூரிய மந்திரத்தை ஜபித்து தருமர் அக்ஷயபாத்திரம் பெற்றார். ஒவ்வொருநாளும் பஞ்ச பக்ஷபரமான்னத்துடன் அந்தணருக்கெல்லாம் சந்தர்ப்பணை செய்து, மீதியை அந்த உத்தமர்கள் சாப்பிடுகிறார்கள். பாண்டவர் வாழ்க!

துரி: ஐயையோ! அவர்கள் நாசமாய்ப்போக என்று ஒரு சாபம் வைக்கலாகாதா? இந்த முனிவரும் நமக்குப் பிரதிவாதியாக வந்தாரே. முனிவரே தாங்கள் மூன்று காலமும் அறிவீர்களாமே. பாண்டவர்கள் இப்படியே இருப்பார்களா, சீக்கிரம் ஒழிவார்களா?

மைத்ரி: அதர்மனே, தருமபுத்திரர்மேல் உனக்கென்ன இவ்வளவு வன்மம்? மகா சாதுக்கள். கடவுள் அவர்கள் மூலமே தருமத்தை நிலைநாட்டுவார். நல்லது சொல்லுகிறேன் கேள்!

துரி: எனக்கு நல்லதானால் தாராளமாகக் கேட்கிறேன். அவர்களைச் சபித்தால் உமக்குத் திருமடம் கட்டித் தருகிறேன்.

மைத்ரி: சுயோதனா! ஐவர்பலம் தருமபலம்.

துரி: பலமிருந்தால் அன்று சபையில் காட்டியிருக்கலாமே! போரில் அத்தனைப் பேரையும் ஒழித்து, உங் தொல்லையில்லாமல் ராஜ்யமாள்வேனே!

மைத்ரி: சுயோதனா, பொறுமை....! உனது அதர்மச்செருக்கும் கொடுமையும் உலகறிந்தது. நான் தீர்த்தயாத்திரை செய்து வனத்திற்கு வந்தேன். அங்கே தருமபுத்திரரைக் கண்டேன். தவக்கோலம் பூண்டிருக்கிறார். சாதுக்கள் அவரைச்சுற்றி திவ்யநாமம் பாடுகின்றனர். முனிவர் தவம்புரிகின்றனர்.

துரி: எதற்கு? நான் நாசமாய்ப்போக என்று?

திருத: அடக்கமாயிரு, துரியோதனா, முனிவர் பேசட்டும்.

மைத்தி : நீ மாயச் சூதாடி குலபத்தினியைத் துயிலுரிந்ததைக்கேட்டுத் திடுக்கிட்டேன். கண்ணன் பத்தினியின் மானத்தைக் காத்ததைக் கேட்டு மகிழ்ந்தேன். ஐவரும் மஹாசூரர்கள். தருமதேவதைக்காகப் பொறுத்திருக்கிறார்கள். வஜ்ரசரீரம் படைத்தவர்கள். கிர்மீரன் என்ற ஒரு பொல்லா அரக்கனைப் பீமன் ஒரே குத்தில் பிண்டம் பிடித்துவைத்தான்.

துரி : ஐயோ அங்கும் பீமவேலை நடந்ததா ?

மைத்தி : சுயோதனா, பாண்டவர்கள் கோழைகளல்லர். இடியினும் கொடிய வலிவுடையார். ஆயிரக்கணக்கான அரக்கரைக் கொன்றெறிந்த கண்ணன் அவர் பக்கம் இருக்கிறான். கண்ணனும் விஜயனும் சேர்ந்தால் போதும், உங்களையெல்லாம் ஒரேநாளில் ஒழிக்க முடியும். பேசாமல் அவர்களை அழைத்துவந்து அரசைக்கொடு !

துரி : சரி, இதுவும் என் பிராணனைவாங்கத்தான் வந்திருக்கிறது. முனிவரே, சொல்லுக சொல்லிற் பயனுடைய, யாகாவராயினும் நாகாக்க. இந்த நாட்டை ஆளும் துரியோதன மன்னன்முன்னே தாங்கள் இருக்கிறீர்கள். கவனம். அரசனைப் போற்றிவாழ்!

மைத்தி : அரக்கமாயம் அறச்சுவடி சொல்லுகிறது! துராத்மனே, பதிமூன்றாண்டுகளைப் பதிமூன்று நாட்கள்போலக் கழித்துக் கண்ணன் அருளால் பாண்டவர் திரும்பி வருவர்; நாட்டைக் கேட்பர்.

துரி : அப்போது மாமா யுக்தி சொல்வார். அவர்கள் பிழைத்து வரும்போது பார்ப்போம்.

**மைத்ரி :** வந்தால்........ராஜ்யம் ?

**துரி :** அதுதான் பூஜ்யம்! இருக்க வீடுகூடத் தரமாட்டேன். ஊசிகுத்தும் இடங்கூடத் தரமாட்டேன்.

**மைத்ரி :** ஏனப்பா அவர்கள் மீது இப்படிப் பகைதீட்டுகிருய்? போர்வரும், பெரும்போர்வரும். கவனம்.

**துரி :** முனிவரே! நீர் இன்று அவர்களை அறிவீர். நான் பிறந்ததுமுதல் அறிவேன்; இடத்தைக்கொடுத்தால் மடத்தைப்பிடுங்கும் பேர்வழிகள். மறுபடியும் அவர்களை அழைத்து மரியாதை செய்யவாம்; அவர்கள் இன்னொரு ராஜசூயாகம் செய்து, அந்த இடையனுக்கு முதல்தாம்பூலம்தந்து, என்னை அவமானப்படுத்தவாம்! சிசுபாலன்கூட இல்லை வாயாரத்திட்ட. முனிவரே, துரியோதனச்சிங்கம் வைத்ததே இங்கே சட்டம். அவர்களுக்குக் கண்ணன் இருந்தால் எனக்கு இதோ மாமா இருக்கிருர். விஜயனை வீழ்த்தக் கர்ணன் ‘எங்கே எங்கே’ என்று தோள் தினவெடுத்துத் திரிகிருன். அந்தக் குண்டோதரனை அடித்து நசுக்க இதோ சிங்கம் இருக்கிறேன். தருமண்ணு அப்பாவி. ஒரு அதட்டுப்போட்டால் வேதாந்தம் பேசிக்கொண்டு காட்டில் இருப்பான். பீஷ்மர், துரோணர், கிருபர், அஸ்வத்தாமர் எல்லாரும் என்பக்கம். நான் பயப்படவில்லை. எனக்கு உரிய நாட்டைத்தான் ஆளுகிறேன். போர்வரட்டும். இதோ முண்டாத் தட்டி நிற்கிறேன்.

[தோள் தட்டுகிருன்]

**மைத்ரி :** அறமில்லையா? உன் கொடுமையைக் கடவுள் தாங்குமா? அதர்மப்பித்தனே? இந்த மாயவாழ்க்கை

எத்தனைநாள்? மனச்சாட்சிக்குப் பயப்படு! பரந்தாமன் அவதரித்திருக்கிருன். அவனது ஆக்ஞாசக்கரத்திற்குப் பயப்படு!

**துரி :** நான் துரியோதனச் சிங்கம்; விசித்திரவீரியன் பேரன். யாருக்கும் பயப்படவேண்டியது அனுவசியம். முனிவரே! இடத்தைக் காலிபண்ணும்! போதும் வேதாந்தம். எல்லாம் தருமப்பூச்சிமுன்னே பேசும்.

**மைத்தி :** துரியோதனு, முடிவாகச் சொல்லுகிறேன். போர் மூளும். பேசாமல் ஐவரையும் அழைத்து அரசைக் கொடு! விஜயனும் பீமனும் மஹாசூரர்கள்!

**துரி :** அட சை! எத்தனைதரம் என் வயிற்றெரிச்சலைக் கிளப்புவீர்? யாழ்ப்பாணத் தேங்காய்மாதிரி மண்டை, நரிவால் மீசை, கூந்தற்பனைபோலச் சடை, பூசணிபோலப் பூச்சு! முனிவராம்! எனக்குச் சனியராக வருகிருர்கள். ஐயா, உமது அக்கப்போருக்கெல்லாம் ஒரே பதில். இந்தாரும்! (மீசை முறுக்கித் தொடையைப் பட் பட் என்றடித்து) இதுதான் பதில்.

**மைத்தி :** துஷ்டா, உன்செருக்கு வீழும். இதே தொடையில் அடித்து உன்னைப் பீமன் கொல்லுவான். போர் மூளும்.

**திருத :** முனிவரே! குழந்தையை அப்படிச் சபிக்கலாமா? சாபத்தை மாற்றும்.

**துரி :** சும்மா இரு, அப்பா! இவர் சாபமும் சரி மண்டூகத்தின் கோபமும் சரி.

**மைத்தி :** அரசே! பாண்டவர் மனம் குளிரப்பண்ணினல் சாபவிமோசனமாகும். இன்றேல் போர், போர்,

போர் வந்தே தீரும். அதருமம் வீழ்க! தருமம் வாழ்க! ஓம் நம சிவாய!

[போகிறார்]

துரி: தொலையட்டும் உபத்திரவம். ஐயையோ மற்றொரு உபத்திரவம் வருகிறதே.

[வருகிறார் விதுரர்]

விதுர: அண்ணா நமஸ்காரம்.

திருத: விதுரா வந்தாயா. மன்னித்துக்கொள். ஏதோ புத்திரபாசம் என்னை இப்படிப் படுத்துகிறது. முரட்டுப்பிள்ளை, என்ன சொன்னாலும் கேட்கமாட்டேன் என்கிறான். இப்போது மைத்திரேயி முனிவரைக் கண்டபடி பேசிச் சாபம் வாங்கிக்கொண்டான். நீயாவது சொல்லு.....புத்தி.

துரி: எனக்கு மாமா புத்தி சொல்வார். வேறு யாரும் என் ஜோலிக்குவரக்கூடாது. நான் ராஜா. என்ன வேண்டுமானாலும் செய்வேன்.

விதுர: துரியோதனா, உனக்கேனப்பா இப்படிப் புத்தி தலைகீழாயிருக்கிறது. அட குலத்தை கெடுக்கவந்த கோடாலிக்காம்பே! மகா தருமவான்களும் அசகாய சூரர்களுமான பாண்டவர்களை நீ சாமான்யமாக நினைக்காதே. பகாசுரனையும் கிர்மீரனையும் பிண்டம் பிடித்ததுபோல் பீமன் உன்னையும் பிண்டம்பிடிப்பான். தருமபுத்திரனுக்காகவே அடங்கியிருக்கிறான். போர் புரிய அவர்கள் மனம் துடிக்கிறது. பாஞ்சாலியின் கண்ணீர் ஆறாய்ப் பெருகியது. அவள் கூந்தல் முடிக்

கவாவது ஒரு போர் மூண்டே தீரும். குருகுருலம் அழியும். உன்னால், உன் வணங்காச் செருக்கால், உலகமே அழியும். அபவாதம் கட்டிக்கொள்ளாதே.

துரி: போதும் உபதேசம்! போராம்! மூளுமாம்! அதற்கு முன் சுருக்குவழியில் ஒரு காரியம் செய்கிறேன் பார்! இதோ போகிறேன், வா மாமா! இந்த உபத்திரவங் களை ஒரே நாளில் ஒழிப்போம். விதுரரே, இதெல்லாம் நீர்செய்யும் கிண்டல். தாடிவைத்த ஆட்களை அனுப்பி, என் பிராணனை வாங்குகிறீர். இனிச் சாமியார்களை யெல்லாம் பிடித்து என் பட்டாளத்தில் சேர்க்கப் போகிறேன். அம்மா பிள்ளைகள் வருவார்களாம், அரசு கேட்பார்களாம், போர் தொடுப்பார்களாம்! நான், நான் வீழ்வேனாம், இவர்கள் வாழ்வாராம்! இரண் டிலொன்று பார்த்துவிடுகிறேன். என் அரசு, என் ஆட்சி, என் அதிகாரம், என் சட்டதிட்டம், என் புகழ், என் கீர்த்தி, என் கூட்டம், என் மாமா நான்— இவையே நித்தியம் என்று நான் இதோ விளக்கு கிறேன். வா மாமா!

[சகுனியுடன் போகிறான்]

விதுர: அண்ணா, அவ்வளவுதான், இவனால் குருகுலம் அழியும்!

திருத: ஐயோ விதுரா, நான் என்ன செய்வேன்.

[திரைக்குப்பின்னே போர்முரசு கேட்கிறது]

அதென்ன போர்முரசம்?

**விதுர :** துரியோதனன்தான் படைகொண்டு கிளம்புகிறான். கண்ணனே சாதுக்களைக் காப்பாற்றவேண்டும். உடனே வியாசபகவானிடம் முறையிடுகிறேன்.

[ஓடுகிறார்]

**திருத :** ஈசனே! மனக்கண்ணால் கோரயுத்தமும் இரத்த வெள்ளமும் காண்கிறேனே. ஆ!

[சோர்வடைகிறான். திரை விழுகிறது.]

## காட்சி ௪. வியாசர் கொடுத்த நூடு

[துரியோதனன் வீராவேசத் தாண்டவத்துடன் படை நடத்தி வருகிறான்]

**படைகள் :** குத்து, வெட்டு, கொல்லு! கொல்லு, குத்து, வெட்டு!

போர்! போர்! போர்!
குடல் கலங்கிடப் பகை நடுங்கிடக்
கொடி உயர்ந்தது பார்—இரத்தக்
கொடி உயர்ந்தது பார்!
கடல் கலங்கிட மலை குலைந்திடப்
படை யெழுந்தது பார்!

[முரசு கொட்டி வனக்காட்சியைச் சுற்றிச்சுற்றி வருதல்]

**துரி :** ஹூம்! குத்து வெட்டு கொல்லு! துரியோதனச் சிங்கம் கர்ஜித்தது! குந்தி குஞ்சரங்கள் நடுங்க வேண்டும். வீரர்காள்! காட்டை அலசி அந்த யானைகளைப் பிடியுங்கள்! வாளை உருவுங்கள்! ஈட்டியை நீட்டுங்கள்! ஐவரைத் திட்டுங்கள்! பார்ப்போம் ஒரு கை. அறவலிக்கும் எனது மறவலிக்கும் போர், போர்,

போர்! ஹூம், முழக்குங்கள்! வில்லை நாணேற்றுங்கள்! அம்பு தயார்!

**படைகள் :** ஹா, ஹா, ஹேய்!

இடி யிடிக்குது மனம் துடிக்குது
ஒக லோடுக்கி டவே!
சடசடவென விடுவிடு சரம்
சயம் சயம் நமக்கே...! (போர் போர்)

**துரி :** ஹா அப்படி! என் முன்னே யார் நிற்க முடியும்? விதுரனைப் பதறென ஒதுக்கினேன். குருட்டுத் தந்தையை மிரட்டி யடக்கினேன். முனிவனை முனிந்தனுப்பினேன்! ஆ, அதோ ஒரு தாடிவருகிறதே. ஐயையோ.......பாட்டையா.......கெட்டது காரியம்!

[வியாசர் வருகிறார்.]

**வியாசர் :**

எங்கே கிளம்பினை மைந்தா?-ஐயோ
ஏன் இந்தக் கோபப் படைச்சேருக் கெல்லாம்?

**துரி :** இல்லை பாட்டையா.......வும்.......வும்.

**வியாசர் :** சொல் உள்ளதை, துஷ்டா?

**துரி :** என்ன பாட்டையா!....நான் யாருக்கும் பயப்பட மாட்டேன்.

அங்கந்தக் காம வனத்தில்—இன்றே
ஆத்திரந் தீர்ந்திடும்......ஐவரைக் கோல்வேன்!
பொங்கிப் புகையுதேன் நெஞ்சம்!—அவர்
பூண்டோ டழியவே வேண்டிச் செல்கின்றேன்.
உங்களுக் கேனிந்த வம்பு—சும்மா
உட்கார்ந்து ஜபமாலை உருட்டுங்கள் தாத்தா!

**வியாசர்:** ஹூம்! நாங்களெல்லாம் உன் அதர்மத்தைப் பார்த்துக் கொண்டிருப்போமோ? குருகுலப் பதரே! திருப்பு சேனையை!

ஆரிய பூமியில் வந்தாய்—நீயும்
ஆண்மகன் என்றுல காளத் துணிந்தாய்!
பாரத நாட்டுப் பதரே—அடா
பாழான வஞ்சப் பொறாமையினாலே
வேறுந் தாயுன் குலத்தை—அறம்
விறிட் டலறுநுன் வெம்மையை நோந்தே
கூரிய நச்சுப்பல் கொண்ட—பாம்பும்
கொல்புலி யும்போற் கொடுமைகள் செய்வாய்!

**துரி:** என்ன தாத்தா! அந்த அம்மா பிள்ளைகளாலே தானே பாரதம் வரும் என்று நீங்களெல்லாம் காடியாய்க் கத்துகிறீர்கள்? அவர்களாலேதானே தொல்லைகளெல்லாம்?

**வியாசர்:** தொல்லைக் கெல்லாம் உன் மனமே கொல்லை. மனமே மனிதன். மனிதன் என்றால் தயை, தாட்சண்யம், மட்டு, மரியாதை, ஈகை, இரக்கம், பரோபகாரம், வாய்மை, தூய்மை, பணிவு, அஹிம்சை, அடக்கம், ஆண்மை, எல்லாரும் நன்றாயிருக்க வேண்டுமென்னும் விருப்பம் இருக்கும்.

**துரி:** எல்லாரும் நன்றாயிருந்தால் நான் எப்படி உலகாளுவதாம்! எல்லாரும் அந்த ஐந்துபேரையே மெச்சுங்கள்! நாங்கள் மீசை முளைத்த நூறு ஆண்பிள்ளைகள் இருக்கிறோம். எங்களை நீங்கள் மதிப்பதில்லை. அவர்கள் ஒழிந்த பிறகுதான் என் அருமை உங்களுக்கு விளங்கும்.

**வியாசர்.** அதர்மப் பதரே உன் பொறாமைப் பெருமூச்சு அந்த ஞான சூரியரை அணைக்காது. உன் ஆணவத் திமிர் அந்த அறமலையைப் பெயர்க்காது.

மெய்வலி மிக்க விறலோர்—உன்
வேகப் படைகளை வெட்டிப் புதைப்பார்
பொய்பகந் தைகொள்ளும் புல்லா—நீசெய்
பொல்லாங்கு தன்னைப் பொறுத்திருக் கின்றர்
ஐவரும் ஐந்துல காள்வார்—நின்
அக்ரமம் காலத்தால் அழியும்என் றெண்ணித்
தெய்வத்தைச் சார்ந்திருக் கின்றர்—அவர்
சேரும் இடத்திலே சேருந் திருவே!

குழந்தாய், தருமமும் தெய்வமும் மனச்சாட்சியும் ஒன்று. அவற்றிற்கு அடங்கி நட!

**துரி:** எனக்குத் தெய்வம் மாமாதான்.

**வியாசர்:** அவனாலேதான் உனக்குச் சனி பிடித்திருக்கிறது. எழரை நாட்டுச்சனி! பேசாமல் அந்தத் தர்மாத்மாக்களை வணங்கி வரவேற்று நாட்டைத்தா.

**துரி:** எப்போதும் பாட்டையா அவர் பக்கமே பேசுவது. உம் உம்! (மனத்துள்) இந்தப் பேனுப்பித்தம் பிடித்த கிழவர் தொல்லை பெரிது. (நேர்முகமாக) தாத்தா, உங்கள் புராணச் சுருளையே அவிழ்த்துப் பாருங்கள். விசித்திர வீரியனுடைய மூத்தபிள்ளை என் அப்பன். அவனுக்கு மூத்தபிள்ளை நான். அப்பனுக்கு கண் தெரியாது போனல் என்ன? என் கண் கோட்டான் மாதிரி விழித்துக் கொண்டிருக்கிறதே. அவர்கள் பாண்டு பெறாத குந்திபிள்ளைகள். கன்னியாயிருக்கும் போது காதுவழியாக ஒரு பிள்ளை பெற்றுளாம் குந்தி.

நீர்தாமே கதைகட்டி வைத்திருக்கிறீர். சூரியன், வாயு, இந்திரன் என்று பெயர் வைத்துப் பிறந்த அம்மாபிள்ளைகள் எனது பரம்பரை அரசில் பங்கு கொள்வது என்ன நியாயம், பாட்டையா? அன்று ராஜசூய யாகத்தில் இடையனுக்கு முதல் தாம்பூலம் தந்தான் தருமன். இந்திரப்பிரஸ்த மாளிகையில் என்னைப் பார்த்துச் சிரித்தாள் பாஞ்சாலி. ஆண்மையுள்ளவர் எப்படிப் பொறுப்பது? அதனாலே தான் மாமாவைக்கொண்டு அவர்கள் வாலை அறுத்து வனத்திற்கு விரட்டினேன்.

**வியாசர்:** குழந்தாய், நீ அவர்களை வனத்திற்கு விரட்டவில்லை. தருமதேவதையைத் துரத்தினாய். சத்தியம், பலம், வீரம், ஞானம், தவம் ஆகிய புதல்வரைக் கூட்டிக்கொண்டு, சக்திக்கனலுடன் விளங்கும் தருமதேவதையே இன்று வனவாசம் செய்கிறது. வஞ்சம், சூது, பொறாமை, சூழ்ச்சி, பொய், அகம்பாவம், பொறாமை ஆகிய தீமைகளெல்லாம் உங்கள் வடிவாக நாட்டிலே அசுரக் கொடுங்கோல் செலுத்துகின்றன.

**துரி:** இப்படியெல்லாம் என்னைப்பற்றிப் பாரதத்தில் எழுதித் தள்ளப் போகிறீராக்கும். (ஒருபுறமாக) இருக்கட்டும், நான் ராஜா; எழுத்தாணியைப் பறிமுதல் செய்துவிடுகிறேன். என்ன பாட்டையா! அவர்கள் தாம் அறிவாளிகளா. எனக்கு மூளையில்லையா?

**வியாசர்:** உன் மூளையில் வரகு வைக்கோல் திணித்திருப்பதும், அவர் மூளையில் ஞானவிளக்கிருப்பதும் அன்றே தெரிந்ததே. உந்தை அந்தகன். நீ மனக்குருடன், மடையன்.

**துரி:** என்ன தாத்தா சும்மா என்னையே........நானல்லவா இந்த உலகிற்கு அரசன்?

**வியாசர்:** அருள் யாரிடம் உள்ளதோ அவன் அரசன். அரசன் உண்மை, அறிவு, அன்பு, திறமை, தியாகம், பக்தி, பரோபகாரம், சமயோசித புத்தி—இவை நிரம்பியிருக்கவேண்டும். பொறாமை, பொய், அகம்பாவம், பேராசை, சூது, கள், காமவெறி, பொன்வெறி, மண்வெறி, மதவெறி, அதர்மம், கொடுமை—இவையெல்லாம் அரசை அழிக்கும். அரசன், அறமும், கலையும், அருளும், திருவும், பொதுநலமும், தவமும் வளர்க்கவேண்டும். தன் உயிரை மன்னுயிர்போலக் காக்க வேண்டும். பெரியார்களை மதித்து வணங்கி நடக்கவேண்டும். அந்தண் முனிவரை அடிபணிய வேண்டும்.

**துரி:** போதும் போதும்! (காதை மூடிக்கொள்ளுகிறான்.)

**வியாசர்:** குடிகள் செய்யும் பாவங்கூட அரசனைப் பீடிக்கும் என்றால் அரசன் பாவம் செய்யலாமா? உயிர்கள் வருந்த அதர்மக் கொடுங்கோல் செலுத்துவோன் அரசனல்லன், அசுரன்.

**துரி:** போதும், ஐயையோ போதும்! பாட்டையா அதெல்லாம் எழுதியாவது தொலையும். என் காதைத் துளைக்காதேயும்.

**வியாசர்:** நீ இப்போது அரசாளும் கொடுமையைச் சகிக்கமாட்டாமல் பெரியாரெல்லாரும் காட்டிற்குப் போய் விட்டார்கள்.

**துரி:** ஐயையோ! அபராதம் போதும் போதும்! அபசகுனத்தில் புறப்பட்டேன்.

**வியாசர் :** தருமபுத்திரர் இந்திரப்பிரஸ்தத்தை ஆண்ட நேர்த்தியை எண்ணிப்பார்! என்ன தயை, தானம், தருமம், அன்பு, அடக்கம், வீரம், திரம், அருள்........!

**துரி :** ஐயையோ! வயிறு எரிகிறதே, எரிகிறதே!

**வியாசர் :** அந்தப் படத்தையும் பார், இந்தப்படத்தையும் பார்! அது கண்ணன் அருள்விளங்கும் அழகு. இது... நீ....அகம்பாவ அசுரப்பேய் நடமாடும் சூதர் முழை! தருமமே தருமபுத்திரன். பலமே பீமன். திரமே விஜயன்.

**துரி :** எரிகிறதே! நெஞ்சு காலாக்கினியாக எரிகிறதே! தாத்தா அவர்களுக்கு ஒரு சாபம் போடலாகாதா? என்னைத்தானா சபிக்க வேண்டும்? ஐயோ வயிறு எரிகிறதே! நானும் எவ்வளவோ நன்மை செய்திருக்கிறேனே. பெரியோர்களான விதுரன், பீஷ்மர், துரோணர், கிருபர், அஸ்வத்தாமர் முதலியோரை ஆதரிக்கிறேனே. என் சோற்றையுண்டு என்னைத் திட்டலாமா?

**வியாசர் :** சோற்றுக்கடனுக்காக இவர்களெல்லாரும் உன் பக்கம் இருக்கவேண்டி யிருக்கிறது. அவர் மனமெல்லாம் பாண்டவரிடமே யுள்ளது.

**துரி :** பாண்டவரைச் சபையிலே அடித்துக்கொல்லாமல் காடுசெல்ல விடுத்தேனே அதுவே நன்மையல்லவா? பாரதம் நடக்கப்போகிறது, கவிபாடிப் புகழ் பெறலாம் என்று, தாத்தா, எழுத்தாணியைத் தீட்டிவைத்திருக்கிறீர். பாண்டவரை இப்போதே ஒழித்தால் உங்கள் பாரதம் படிப்பவருக்குத் தொல்லையில்லாமல்

சுருக்கமாகுமல்லவா? எழுத்தாணிக்கு வேலை வேண்டு மென்றே இப்படி அவர்கள் பக்கம் பேசுகிறீர்.

**வியாசர்:** புஷ்பவனத்தில் புலிபோலப் புகுந்தாய். சந்தனச் சோலையில் மலைப்பாம்புபோல வந்தாய். பொறாமைப் பித்தா!

வீட்டைக் கெடுக்கும் பொறமை—பல
வீண்பகைக் கட்சி விளைக்கும் பொறமை
நாட்டைக் கெடுக்கும் பொறமை—உண்மை
நல்லோரைத் தாக்கி நலியும் பொறமை.
தீட்டிடும் சண்டைக்குக் கத்தி—அதன்
தீமைகள் கோடி தெரிந்தது தானே
ஓட்டினை தர்மத்தைக் காட்டில்—அடாநீ
உய்ந்திட வேண்டிடில் இவரை நேசி.

**துரி:** அதுதான் மாட்டேன். அவரை ஒழித்தே நான் வாழமுடியும்.

**வியாசர்:**

வாழும் வகையிது பிள்ளாய்—நெஞ்சில்
வஞ்சப் பொறமை வாாது விரட்டு
தோழமை கொள்உயர்ந் தோரை—அந்தத்
துட்டச் சகுனியைத் தூரோடு நீக்கு
ஆள்வலி யாற்செருக் குற்றாய்— மூடா
ஆணவ மாயத்தால் அக்ரமம் செய்தாய்
ஊழ்வலி யொன்றுண்டு காணாய்—உண்மை
உத்தமர் தெய்வ பலத்தினால் வெல்வார்.

**துரி:** இதேதடா தொல்லை! கவியில் பிடித்தால் பாட்டையா விடமாட்டாரே. எமகண்ட வேளையில் புறப்பட்டிருக் கிறேன். அதனாலேதான் நீர் வந்தீர்.

சாபம் வைக்காதிரு தாத்தா—அப
சதுனமாய் இந்தச் சமயத்தில் வந்தாய்
கோபத்திலே மழை பெய்தாய்—மீளக்
கொண்டு தொலைகிறேன் சண்டைப் படையை
ஆபத்துன் வார்த்தையை மீறல்—நீ
ஆக்கும் கவி என்னைத் தாக்கச் சகியேன்
சாபம் வைக்காதிரு தாத்தா—உன்
சங்கடம் தீர்ந்தபின் என்கடன் செய்வேன்.

வீரர்காள் வலது! இடது! நேர்! திரும்பும்! செல்லும் ஹஸ்தினபுரி!

**படைகள் :** (பாடி முரசுகொட்டி) ஹா ஹா. ஹேய்!

[செல்லுகின்றன]

**வியாசர் :** தருமம் வெல்க! சத்தியம் ஓங்குக! இவன்பொறுமை சும்மா இராது; உடனே, தருமம் வெல்லப் பாண்டவருக்கு உபாயம் ஒன்று சொல்லுகிறேன். ஓம்! நமசிவாய ஓம்!

[செல்லுகிறார்]

முதல் அங்கம் முற்றிற்று.

---

# இரண்டாவது அங்கம்

## காட்சி க. கண்ணன் கருணை

[காமிகவனம். பர்ணசாலைமுன் புல்மேடை. அதில் கண்ணன் எழுந்தருளியிருக்கிறான். எதிரே கனிகள், மலர்கள். கண்ணன் பக்கம் பாஞ்சாலி நிற்கிறாள். முன்னே ஒரு பீடத்தில் தருமர் வீற்றிருக்கிறார். அவருக்குப் பக்கத்தில் கதையுடன் பீமன், வில்லுடன் விஜயன் நிற்கின்றனர். அவர்களுக்கும் பின்னே நகுல சகாதேவர் நிற்கின்றனர்.]

**எல்லோரும் :**

(நொண்டிச்சிந்து)

அன்பொடுன் னடி பிடித்தோம்—கண்ணா
அபய மபய மெங்கள் ஆண்டவனே !
துன்பத்தைத் துடைப்பவனே—உண்மைத்
தொண்டரி னண்டையி லிருப்பவனே !
இன்பத்தைக் கொடுப்பவனே—எங்கள்
இடர்களை வேருடன் அறுப்பவனே !
வன்பகை யரக்கர் குலம்—வேக
வடவனல் போலுள்ளங் கொதிப்பவனே ! (அன்)

வெஞ்சிறை தகர்ப்பவனே—அன்பர்
விடுதலைக் கேயவ தரிப்பவனே !
கஞ்சரின் சூழ்ச்சியெல்லாம்—மண்ணைக்
கௌவிடச் செய்திடுஞ் செவ்வியனே !
வஞ்சகப் பூதனையின்—உயிர்
வற்றிட வட்டமுலை யுண்டவனே !

பிஞ்சிளந் தளிரடியால்—*வண்டிப்
பேயினை யுதைத்திட்ட நாயகனே (அன்)

கன்றுன ராக்ஷஸனை—யெற்றிக்
கலகல வெனக்கனி யுதிர்த்தவனே !
மென்றளி ரடி மிதித்தே—பாம்பின்
மீது நடம்புரிந்த மாதவனே !
குன்றெடுத்துக் கோகுலத்தை—இந்த்ரன்
கோபப் புயலினின்றுங் காத்தவனே !
கொன்றொரு குத்தினிலே—கம்ஸன்
கொடுமையைத் தீர்த்தனே, கொற்றவனே !(அன்)

பெண்களுக் கினியவனே—சிறு
பிள்ளைகளோ டாடுகின்ற பெரியவனே !
கண்களுக் கினியவனே— யெங்கள்
காதலை முழுக் கொள்ளை யடித்தவனே !
பண்வளர் முரளியினால்—எம்மைப்
பரவசப் படுத்திடு மாயவனே !
விண்வளர் தண்ணமுதே—எங்கள்
வீடுதோறுந் தோழருடன் ஆடி வருவாய் !(அன்)

[பாட்டைப்பாடி மலர் தூவுதல்]

ஓம் க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம ! கண்ணா, நீயே சரண். எம்மை ஆட்கொண்டு நடத்து !

**கண்ணன் :** அன்பர்காள், அறம் வெல்லும், அறவோர் தழைப்பர். அரக்கர் அழிவர். அதர்மம் வீழும். தர்மாத்மாக்களுக்கு ஒரு குறைவும் இல்லை. அவர்

---

* சகடாசுரன்.

என்னுள் இருப்பர். நான் அவருள் இருக்கிறேன். உலகில் அசுரமாயம் சண்டதாண்டவமாடுகிறது. உங்களைப் போன்ற தீரவீரர்கள் காட்டில் வசிப்பதும், துரியோதனக் கும்பல் நாடாள்வதும் அதற்கு அத்தாட்சி. ஆசை, ஆணவம், பொறாமை, நாத்திகத்திமிர், காமவெறி, திருட்டு, கள், சூது, கொலை, சுயநலம், சிறுமை, மடமை, கொடுமை—இவையே அசுரத் தன்மைகள். இவையே கம்ஸன், ஜராசந்தன், சிசுபாலன், துரியோதனாதிகளாக உருவெடுத்திருக்கின்றன. தூய்மை, வாய்மை, பொறுமை, அன்பு, அடக்கம், சமநோக்கம், ஆத்மஞானம், தெய்வசரணாகதி, அருளுணர்ச்சி, தவம், ஜபம், பக்தி, தியானம், யோக வாழ்க்கை—இவையே தெய்வத்தன்மைகள். இவையே தருமபுத்திரர், விதுரன், போன்ற உத்தமராக உருவெடுத்திருக்கின்றன.

**சகாதேவன்:** எல்லாம் உனது திருலீலைக்காகவே உருவெடுத்திருக்கின்றன. கண்ணா உனது புன்னகைக்குப் பின்னே பாரதப் போர்முழக்கங் காண்கிறேன்; ஓர் ஊழித்தீ ஜ்வலிக்கிறது; கொழுந்தேறுகிறது. நீயே உலகம். நீயே உயிர்க்குலம். ஆறுகளெல்லாம் கடலைச் சேரும். ஆருயிரெல்லாம் உன்னையே கூடும். உனது காலாக்னியில் அரக்கப்பூச்சிகள் விட்டில்களைப்போல் வீழ்ந்து மடிவதைக் காண்கிறேன். விசுவரூபனே! உனது அன்பைப் பெற்றபோதே நாங்கள் கவலை தீர்ந்தோம்; தருமம் வென்றது, அதர்மம் அழிந்தது.

**கண்ணன்:** மஹாஞானியே, நீ என்னை அறிவாய். தருமம் தாழ்ந்து அதர்மம் தலையெடுக்கும் போதெல்லாம்,

துஷ்டர் சாதுக்களை வருத்தும் போதெல்லாம், நான் யோக மாயையால் அவதரிக்கிறேன்; அறத்தை நாட்டுகிறேன்; அசுரக் கொடுமைகளை எனது சக்கரத்தால் வழித்திபோல் அழிக்கிறேன்; மாந்தரை அமர வாழ்விற்கு உயர்த்துகிறேன்; எல்லாவுயிர்களின் உள்ளத்திலும் இருந்து, அறிவை உயர்த்தி அருளைப் பொழிகிறேன். அனைத்தும் என்மயம். மாலையில் கயிற்றைப்போலே அண்டகோளங்களுக் கெல்லாம் நானே ஆதாரமாயிருக்கிறேன். என்னைத் தவிர யாதும் இல்லை. எனது ஒரு அம்சத்தால் அனைத்தையும் தாங்குகிறேன். உள்ளே என்னையும், உலகில் என் அருள் விளையாட்டையும் காணும் அறிவன்பரே எனக்கு இனியர். அன்பரை நான் அபயமளித்துக் காப்பேன். தர்மாத்மாக்களே, நீங்களே நான். நானே நீவிர். உம் அன்பர் எம் அன்பர். உம் பகைவர் எம் பகைவர். உமது உயிர் எனது உயிர். அடியாரை இன்பநிலைக்கு நடத்தல் எனது பொறுப்பு. பெயர் சொல்லி வழைத்து முறையிடும் அன்பர் குறைதீர்ப்பதே என் கடமையாம்.

**தருமன்:** கண்ணா! நீ பெரிதினும் பெரியவன், அரிதினும் அரியவன். நீயே நண்பன், தாய், தந்தை, சற்குரு. நீயே காலசக்தி, மூலசக்தி. ஒலியில் ஓம், ஒளியில் சூரியன், நீரில் கடல், நாடுகளில் புண்ணியபாரதம், மலையில் இமயம்—எல்லாம் நீயே. அன்று மன்றில் பாஞ்சாலியின் மானங்காத்த கருணைப்பெருமானே! நாங்கள் நாடிழந்தோம், காடு சேர்ந்தோம், வீடிழந்தோம். விதியால் மதிகெட்டுச் சகுனிவலைப்பட்டுச் சூதாடினேன். நான் செய்த குற்றத்தால் இவர்களெல்

லாரும் பதமிழந்து சுகமிழந்து வருந்துகிறார்கள். இந்திரப்பிரஸ்த வாழ்க்கை கனவுபோல் மறைந்தது. ஆயினும் உன் அன்பை, நட்பை, உன் திருவடியை, நீ உபதேசித்த அறத்தை நாங்கள் மறவோம். உன்னருளே எமது பொருள், நீயே ரக்ஷகன்!

**விஜயன்:** என் ஆருயிர் நண்பா, உன் இச்சையே நிறைவேறும். அதற்குப் பூர்வபீடிகையே எங்கள் வனவாசம். உன் இதயர் வனத்தில் வசித்தாலும் வைகுண்டத்தில் வசிப்பதுபோலவே மகிழ்வார். கண்ணா! பாஞ்சாலி மானத்தைக் காத்ததுபோலே எங்கள் அவமானத்தையும் தீர்த்திருப்பாய். சூதாட்டத்தையே தடுத்திருப்பாய். ஆனால் உனது திருலீலை நடக்க இதெல்லாம் வேண்டுமே.

**கண்ணன்:** விஜயா, நீ நரன்! நான் நாரணன்! நான் வரும்போதெல்லாம் நீயும் வருவாய். நீயும் நானும் இருக்கும் பக்கம் வெற்றித்திரு விளங்குவாள். நீ சொல்வது சரி. நான் அன்று ஹஸ்தினாபுரியில் இருந்திருந்தால் தருமரைத் தடுத்திருப்பேன். காமம், கள், திருட்டு, கொலை, சூது—இவையெல்லாம் வாழ்வை நரகமாக்கும் பாதகங்கள். சூதினால் அன்று நளன் பஞ்சையானான். இன்று தருமன் ஏழையானான். அன்று நான் இருந்திருந்தால் உங்கள் அழிவிற்கே பகடையுருட்டிய ராக்ஷசக்கையை முறித்திருப்பேன். பாஞ்சாலி துயிலைப் பற்றியிழுத்த கையை வெட்டியிருப்பேன். அக்கணமே பாரதப்போருக்கும் பாஞ்சஜன்யம் முழங்கியிருப்பேன்.

**விஜயன்:** உண்மை. அன்று நீ எங்கே சென்றாய்?

**கண்ணன் :** சிசுபாலன் சகோதரனை சல்லியன் கோபங் கொண்டு துவாரகையை முற்றுகைபோட்டு என்னை யும் தூஷித்தான், போருக்கழைத்தான். அவனைத் துரத்தி அழித்தேன். துவாரகைக்குத் திரும்பினேன். அப்போதே மாயச்சூதினல் உங்களிடமிருந்து சுயோ தனன் அரசைப் பறித்ததும், பாஞ்சாலியை அந்த மடையர் மானங்கெடுக்கத் துணிந்ததும் அறிந்தேன். தருமசக்தியான பாஞ்சாலி கையை உயர்த்தி 'ஹரி ஹரி' என்றுமுறையிடும் குரலைக் கேட்டேன். உடனே ஆடை அக்ஷயமாக வளரச்செய்தேன். மறுசூதிலும் வஞ்சித்து, அப்புல்லர் உங்களைக் காட்டிற்கு ஓட்டி யதை அறிந்ததும் இங்கே ஓடிவந்தேன். எல்லாம் பிற்காலம் நடக்கப்போவதற்குப் பூர்வாங்கமான காரியங்களே. நீங்கள் இருக்கும் இடம் அறநிலயம், என் அன்புநிலயம். பயப்படாதீர்! காப்பாற்றுகிறேன்.

[பாஞ்சாலியை பார்த்தல்]

**பாஞ்சாலி :**

இராகம் பியாகு] [தாளம் ரூபகம்

பல்லவி

தீனரக்ஷகா—என்—மானங் காத்தருள் (தீன)

அனுபல்லவி

ஈன வெம்பகை—என்னை
இழிவு செய்ததே....
ஞானநாயகா—உன்னை
நம்பிக் கும்பிட்டேன்—ஹரி, ஹரி (தீன )

சரணம்

துஷ்ட ராக்ஷச—மாயை
துயி லுரித்ததே—என்
கஷ்டம் பார்த் தின்னும்—ஈசா
கருணை யில்லையோ—கண்ணு
கருணை யில்லையோ—ஹரி, ஹரி (தீன)

கண்ணு, எனது வாழ்க்கையே கண்ணீரானது. நீ புருஷோத்தமன், ஸர்வாந்தராத்மன், சர்வக்ஞன், ஸர்வபௌமன், ஸர்வசக்திமான், மதுசூதனன், அரக்கர்காலன், அன்பர்க்கன்பன்! எனது உள்ளத்துடிப்பை நீ அறிவாய். நான் மகாசூரனான த்ருஷ்டத்யும்னன் தங்கை, பாஞ்சாலன் பெற்ற வீரக்கனல், பீஷ்மனுக்கும் திருதிராஷ்ட்ரனுக்கும் நாட்டுப்பெண் முறை. நான் தீரனுகிய விஜயன் மனைவி. மஹாபலசாலியான பீமன் இல்லாள். தருமாத்மாவான யுதிஷ்டிரன் பத்தினி! நான் ராணி பாஞ்சாலி. என் கணவரில் ஒருவரை மாயவார்த்தைகளால் மயக்கி, சகுனிப் பகடையால் அவருடைய அரசையும் செல்வத்தையும் பறித்தான் துஷ்டன் துரியோதனன். மதிமயங்கிய தருமர் தன்னையே பணயம்வைத்துத் தோற்றுர். தம்பிமாரையும் தோற்றுர். இவ்வாறு தன்னையிழந்தவர், என்னைக் கேளாமல், என்னைப் பணயம் வைத்து ஆடியது என்ன நியாயம்? பெண் பணயமா? சூதாடியது இவர்; தோற்றது இவர். அந்தத் துஷ்டர் யாதுமறியாமல் சாதுவாயிருந்த என்மானத்தைப் பறித்தது என்ன கொடுமை? நான் தொண்டிச்சியாம், அடிமையாம். அந்த வார்த்தையைக் கேட்டாலே எரிமலைபோலே என் உள்ளம் கொதிக்கிறது. உலகுள்ள

மட்டும் பெண் ஆணுக்கு அடிமையென்றோ, மனிதன் மனிதனுக்கு அடிமையென்றோ நான் கேட்கச் சகி யேன். நான் இந்த அதர்மப்புல்லருக்கு அடிமையாம். மதிமயங்கிய ஒரு கணவர் செய்த பிழைக்காக நான் மானமிழக்க வேண்டுமோம். ஓ ஜனார்த்தனா! வீட்டிற்கு விலக்கமான என்னை, கொடிய துச்சாதனன், கூந்தலைப் பிடித்து இழுத்துவந்து, மன்னர் சபையில் நிறுத்தி எனது ஆடையை அவிழ்த்து நிர்வாணமாக்க முயன்றானே, ஐயோ! இந்தக் கொடுமை எங்கே உண்டு? அப்பனே வாசுதேவா! மகா பெரியவர், அறிவிற் பழுத்தவர் என்று உலகம் போற்றும் பீஷ்மர், துரோணர், கிருபர், கொடையிலே பெரியவன் என்னும் கர்ணன், எல்லாரும் என் கண்ணீர்ப்பெருக்கை, என் புண்ணீர்ப்பெருக்கை வேடிக்கை பார்த்தனர். குல பத்தினியான என் ஆடையை அந்தப்போக்கிரி துச்சாதனன் அவிழ்க்கும்போது தனக்குப்பெரிய கிரீடம் வந்ததுபோலே மகிழ்ந்துபோனான் துரியோதனன். இந்த ஐவரும், மகா பலசாலிகளான, சூரப்புலி களான, என் கணவரான இந்த ஐவரும், அந்தச் சபையிலேதான் இருந்தார்கள்! எனது மானத்தைத் துஷ்டர் அவ்வளவு கொடுமையாகச் சூறையாடுவதைப் பார்த்துக்கொண்டுதான் இருந்தார்கள். ஐயோ அச்சமயம் யார் என்னைக்காக்க வந்தார்கள்? "இச் சபையில் நீதிமான் யாரும் இல்லையா? மனிதத் தன்மையுள்ள மனிதர் யாரும் இல்லையா? ஆண்மையுள்ள ஆண்பிள்ளைகள் ஒருவராவது இருந்தால் இந்தத்துஷ்டர் செயலைப் பார்த்துச் சும்மா இருப்பார்களா? ஐயோ!" என்று கதறினேன். என் கணவர், முகத்தைத் தொங்கப்போட்டுக்கொண்டு, கோழைக்கண்ணீரையும்

சமயத்திற்குதவாத சாந்தோபதேசத்தையும் பற்றி நின்றனர். இன்னும் ஒரு சுற்று....வீட்டிற்கு விலக்கமான நான் சபையில் நிர்வாணமாக நிற்பேன். அந்த அசுரன் என்னை மடிமேல் உட்காரவைப்பான்....நன்ருயிருக்குமல்லவா? அந்தச்சமயம் தருமரை நோக்கினேன். "பொறுமை" என்ருர். "உன்பொறுமையில் தீயை வைக்க!" என்று மனத்திற் கடிந்தேன். பீமனை நோக்கினேன். அவர் மீசை துடித்தது, கையில் கதை துள்ளியது. ஆனல் தருமருக்குக் கட்டுப்பட்டுச் சும்மா யிருந்தார். "இடும்பனைக் கொன்ற பீமனு இவன், சை!" என்று விஜயனை நோக்கினேன். அவரது காண்டீபமும் அண்ணனுக்குக் கட்டுப்பட்டுக் கையில் உறங்கியது. "சை, சை! இவர்கள் சமயத்திற்குதவாத வேதாந்தப் பேடிகள்." எனது மானத்தைக் காப்பவர் கணவரல்லர்....பெரியாரல்லர்....ஒருவனே... கண்ணனே....நீயே என்றறிந்தேன். அந்த அறிவைத் தூண்டியதும் நீயே. "ஸ்ரீ ஹரி, இப்பத்தினிமானத்தை நீயே காக்கவேண்டும். ஹரி, ஹரி!" என்று பிடித்துக் கொண்டிருந்த ஆடையையும் விட்டேன். கையை உயரக்கூப்பித் தொழுதேன். என் அப்பனே! கருணை மூர்த்தியே, நீ என்னைக் காத்தாய். நீயே ரக்ஷகன்! உனக்கு வணக்கம், நன்றி!

**கண்ணன்:** கற்புக்கனலே, வீரபத்தினியே! உன் கண்ணீர் சும்மா போகாது. அது குருக்ஷேத்திரத்தில் புண்ணீர் வெள்ளமாகப் பெருகி, அந்த அசுரக்கும்பலை யழிக்கும். அம்மா பாஞ்சாலி! சீதையைத் திருடிய இராவணுசுரன் குலத்தொடும் அழிந்தான். உனது மானத்தைத் திருடிய துரியோதனக் கும்பல் சாம்பலாகும்

காண்பாய்! அரக்கரை அழிப்பேன். அறவோரைக் காப்பேன். அதற்கே அவதரித்துள்ளேன். இந்தப் பாஞ்சஜன்யம் போர்முழக்கம் செய்யத் துள்ளுகிறது.

**பாஞ்சாலி:** கண்ணா, அந்தச் சபையில் என் கணவர் முன்னே, தன் மடிமேல் என்னை அமர்த்தச்சொன்னான் துரியோதனன். அந்த வார்த்தையைக் கேட்டுக் கொண்டு இந்தச் சூரப்புலிகளும் சும்மாதான் இருந்தன. எனது கூந்தலைபிடித்த அந்த அசுரன் இரத்தத்தைக்கொண்டே இனிக் கூந்தல் முடிவேன். என்னைத் தொடையில் உட்காரச்சொன்ன அவன் தொடையைப் பிளந்து அந்த ரத்தத்தைக் கூந்தலுக்கு ஊட்டும் நாள் வருமா? கண்ணா! அன்று எனது மானத்தைக் காத்ததுபோன்றே, என் சபதத்தையும் நிறைவேற்ற வேண்டும். அன்று உனக்கே அபயமிட்டேன்; இன்றும் உனக்கே அபயமிடுகிறேன். என் கண்ணீரைத் துடைப்பது உனது சுடராழியே.

**கண்ணன்:** கலங்காதே பத்தினிரத்தினமே! வரும், பாரதப் போர் வரும்!

**பாஞ்சாலி:** கண்ணா! பதின்மூன்றாண்டுகள் இப்படித் திரிந்து, பிறகு அரசைக்கேட்கும்போது, அத்துஷ்டன் கொடுக்கமாட்டான். கொடுத்தாலும் அது எனக்கொரு பொருட்டன்று. ஒரு ஊரைப் பெற்றுக் கொண்டு இந்தத் தருமர் மீண்டும் சமாதானம் பேசினால் என் உள்ளம் கொதிக்கும்.

ஊரை வேண்டுவேனா?—பகைவர்
உறவை வேண்டுவேனா?
போரை வேண்டுகின்றேன்—கண்ணா
பூங்குழல் முடிக்க!

கண்ணன் :

கண்ணருவி துடைப்பேன்—உன்
கார்குழலை முடிப்பேன்
பெண்ணை யிங்கே காணுய்—வரும்
பெரிய பாரதப் போர்.

பீமன் : ஆ, என் வீர உள்ளம் புயற்கடலைப்போல் பொங்குகிறதே ; எனது சினம் ஊழித்தீபோலக் கொதிக்கிறதே. இந்தக் கதாயுதம் என் கையில் துடிதுடிக்கிறதே ; எனது தோள்கள் தினவூறுகின்றனவே ; கண்ணு, கண்ணு, இன்றே வரட்டும் பாரதப்போர்! ஊது பாஞ்சஜன்யத்தை! அன்றே அந்த அதர்மப் பதரை ஒரே அடியில் அடித்துத் துவையலாக்கியிருப்பேன் ; அண்ணு வேதாந்தம், முன்னே வைத்த காலைப் பின்னே யிழுத்தது. அண்ணு உதடசைக்கட்டும் ; பகனையும் கிர்மீரனையும் பிண்டம்பிடித்த கையால் அத்துரியோதனனையும் அடித்துக்குடலைக் கிழித்து, உருட்டிப் பிசைந்து பிழிந்த அவர் இரத்தத்தைக் கொணர்ந்து எனது பத்தினித்தெய்வத்தின் கூந்தலில் யானே தடவி முடிப்பேன். கண்ணு, உன் வாயால் 'போர் வரும்' என்றதும், என்மனம் பொங்கி மகிழ்ந்தது. அண்ணு வாயால் ஒருவார்த்தை சொல்லட்டுமே, அண்ணு!

தருமன் :

விதி வசத்திஞலே—இந்த
வினைவசத்த ராேனும்
மதியுடன் பொறுப்போம்—காலம்
வந்தழைக்கும் பீமா.

பீமன் : ஐயோ, குடுமி பற்றும்போதும் பொறுமை பேசுகிறாயே!

தருமன் : பொறுத்தார் பூமியாள்வார்.

பீமன் : ஆம், எட்டடி சுடுகாட்டுப் பூமிதான் ஆள்வார்! அதுகூடத் தரமாட்டான் துரியோதனன்!

தருமன் : தம்பி சாந்தம், சாந்தம்!

காய வாழ்க்கை நிலையோ—தலையிற்
கட்டிச் செல்வ தென்னே?
தீயரை அழிக்கும்—தெய்வம்
தீ நினைவை மறப்போம்.

பீமன் :

உரிமை தன்னைத் தோற்றோம்—அண்ணா
ஊத்த கையிருந்தும்
பொறுமை பேசுகின்றாய்—வேதாந்தம்
பொறுக்க மாட்டேன் இனிமேல்.

தருமன் : பீமா! அவர்களும் நமது பந்துக்கள்.

குற்றம் பார்த்தாற் சுற்றம்—இல்லை
கோபிக்காதே தம்பீ.
பற்றி நாவைக் கடித்த—பல்லைப்
பறித்தெறிவார் உண்டோ?

பீமன் :

மானம் போச்சு தன்னு—நம்
மனைவி கூந்தல் இழுத்தான்—அந்த
ஈனத் துச்சன் கையை—வெட்டி
இரத்தம் குடிப்ப தென்றோ?

தருமன் :

உறவினரைக் கொன்றே—நாம்
உலகையாள்வ தினும்
துறவினரைப் போன்றே—கனி
துய்த்துக் கானம் வாழ்வோம்.

பீமன் : சரி வேதாந்தம் முற்றிப்போனது. அண்ணு,

கதை யிருக்கு தையே—அந்தக்
கயவன் மார்பிளக்க
உதை கொடுத்து நாட்டை—மீட்பேன்
உதடசைப்பாய் அண்ணு.

தருமன் : பீமா! அங்கே விதுரர் பீஷ்மர் துரோணர் போன்ற மேலோர் இருக்கிறுர்கள். ஒருநாள் அவனைத் திருத்துவர். அவன் நல்லவழிக்கு வர வேண்டுமென்றே நினைப்போம்.

பீமன் : அண்ணு, இதென்ன பைத்தியக்கார எண்ணம்? பாலுண்டாலும் பாம்புவிஷம் மாறுமா?

தேனில் ஊறினுலும்—எட்டி
தித்திப்பாவ துண்டோ?
பானகம் வருமோ—கடலிற்
பதக்கு வெல்லம் போட்டால்?

தருமன் : தம்பீ! கொஞ்சம் பணிந்து செல்வோம். பணியு மாம் என்றும் பெருமை.

பீமன் :

பணிந்து வாழவோமோ?—துஷ்டப்
பதகரின் குடைக்கீழ்?
துணிந்து போர் புரிவோம்—அண்ணு
தோள்புடைத் தெழுவாய்!

**தருமன் :** தம்பி, காலம் நம்மை அழைக்கும். அரிச்சந்திரனுக்கு வந்த இடரும், நளனுக்கு வந்த துயரும் நீங்கின. நமது துயரும் நீங்கும். பீமா, சத்தியம் வெல்லும், தருமம் வாழும்! நல்ல காலம் வரும்!

**பீமன் :** ஹ, ஹ, ஹா.

வஞ்ச வெம்பகைவர்—பொருளை
வாரிக் கொண்டு செல்வார்
பஞ்சாங்கத்தைப் பார்த்தே—நாம்
பறிகொடுத்து நிற்போம்!

**தருமன் :** பீமா, சர்வாந்தர்யாமி நம்மைக் கவனிக்கிறான். கால சக்கரத்தை அவனே மாற்ற வல்லவன். அவனே உலகை ஆளும் நாயகன்.

**பீமன் :** சர்வாந்தர்யாமியின் பெயரைச்சொல்லி நாம் கையைக்கட்டிக்கொண்டிருந்தால், இதோ பாஞ்சாலி சபதம் பலிக்குமா? அந்த அரக்கன் தொடையைப் பிளக்கத் துடிக்கும் என்கதை மகிழுமா? அண்ணா! இப்போது தெய்வம் உலகை ஆண்டால் இப்படி அக்கிரமம் நடக்குமா? அரக்கு மாளிகையில் நம்மை வைத்துக் கொளுத்திய அரக்கனுக்கோ இரக்கம்? அண்ணா என் க்ஷத்திரிய ரத்தம் கொதிக்கிறதே!

சகுனிமாமாக் கூட்டம்—நம்
சகத்தை யாளலாமோ?
நகுதேன் கோபத் தீதான்—வில்லை
நாண்சேய் வீர விஜயா?

[விஜயனை நோக்கல்]

**விஜயன் :** அதர்ம அரக்கரை அழிக்கவே இந்தக்காண்டீபத்தை ஏந்தி நிற்கிறேன். அண்ணா, இந்த வில் என்னைப் பார்த்துச் சிரிக்கிறதே.

பத்தினியை துஷ்டர்—மான
பங்கம்செய்யக் கண்டும்
செத்தவர்போ லிருந்தோம்—நம்
சென்மமென்ன சென்மம்!

பீமன்: *சபாஷ் விஜயா! அகோ....அப்படிச் சொல்லப்பா, என் மனங்குளிர!*

விஜயன்:

தாரைதாரை யாகக்—கண்ணீர்
தருமதேவி விட்டுப்
போரைநோக்கு கின்றாள்—இதோ
பூங்குழல் விரித்தே.

பீமன்: *ஆஹா, ஆஹா, நீயே வீரன்! இடித்துச்சொல் இன்னமும்!*

விஜயன்:

புல்லாக்கர் ஆள—வீரப்
புதல்வர் தூங்குவாரோ!
நல்ல ஜாதிச் சிங்கம்—அண்ணா
நரிக்குப் பட்டந் தருமோ?

பீமன்: *அப்படிச் சொல்லு அருச்சுனச் சிங்கம்! (முதுகில் தட்டிக் கொடுக்கிறான்.) உம்!*

விஜயன்: *அண்ணா, தெய்வம் தெய்வமென்று சும்மா அழுது கொண்டிருந்தால் கண்ணீர்தான் மிச்சம்.*

தீர வீரருக்கே—அண்ணா
தெய்வம் கை கொடுக்கும்
சாரமில்லா ஞானம்—பேடி
தாங்கும் வாளைப் போலாம்.

4

பீமன் : அகோ சரியான உபமானம்........சிங்கம் ஒரு போடு போட்டான். அண்ணு, கேள், கேள்! நகுலா விஜயன் வார்த்தை எப்படி ?

நகுலன் :

சத்துருவின் குடைக்கீழ்—வாழும்
சாந்த வாழ்வு சாவாம்
யுத்தம் செய்து செத்தால்—அதுவே
உயர்ந்த வீர வாழ்வாம்.

பீமன் : (முதுகில் தட்டிக்கொடுத்து) நன்ருய்ச் சொன்னுய், நமக்கேற்ற தம்பி! அறிவிற்சிறந்த சகாதேவா!

சகாதேவன் : கண்ணன் எண்ணம் நடப்பது திண்ணம்.

பாரின் பாரந் தீர்க்கக்—கண்ணன்
பாரதப்போர் செய்வான் ;
யாரதைத் தடுப்பார்—அறிவேன்
அவனுளத்தை நன்றே.

விஜயன் : இதுவே முடிவான உண்மை.

கண்ணன்உள்ள பக்கம்—அவன்
கருணை வெள்ளத்தாலே
திண்ணமாகும் வெற்றி—அவனே
செயல்களுக் கிறைவன்.

தருமன் :

அறவினைகள் யாவும்—என்றும்
அமைதியாக வெல்லும்.
மறவினைக் கொடுமை—இறு
மாந்து மண்ணைக் கௌவும்!

பாஞ்சாலி : உண்மைதான். ஆனுல்........

போரை வேண்டும் வீரர்—வெறும்
பொறுமைவேண்டித் தூங்கார்.
பாரை மாயச் சூதில்—வென்ற
பாவியாளப் பாரார்.

இனிக் கண்ணனே முடிவு சொல்லவேண்டும்.

**கண்ணன் :** அன்பர்காள்! என்னைச் சார்ந்திருங்கள்; அன்புசெய்து நியானித்து, எனக்கே வேள்வியாக வினைகளைச் செய்திருங்கள்; இன்பதுன்பங்களைச் சமமெனப் பொறுங்கள்; பணியின்பலனை எனக்கே அர்ப்பணம் செய்துவிடுங்கள்! வீரர்காள், சுதர்மத்தைக் காப்பாற்றுங்கள்! சுதர்மமே வாழ்க்கை. உங்கள் அறம் **அறப் போர்.** எனது நிமித்தகாரணமாகப் போர்முனையில் நில்லுங்கள்! என்று இத்தருமபத்தினியை அத்துஷ்டன் இழிவுசெய்தானோ, என்று குலப்பெண்ணை 'அடிமை' என்றானோ, அன்றே அவன் குலத்தை அழித்துவிட்டேன்; அன்றே பாரதம் மூண்டது; தீயர் மாண்டனர். பகிரங்கமான யுத்தத்திற்கு நிகழ்ச்சிகளைத் தயார் செய்துவருகிறேன். அதுகாறும் பொறுத்திருங்கள்! அக்கொடியன் உங்கள் உயிருக்கு உலைவைக்க ஒவ்வொருநாளும் முயல்வான். நீங்கள் அடிக்கடி இடம் மாறவேண்டும்; ஒரே காட்டில் பல நாட்கள் இருக்கக்கூடாது. இனி நீங்கள் ஸரஸ்வதி தீரத்தில் உள்ள துவைதவனத்திற்குச் செல்லுங்கள்! என்னருளால் நீங்கள் எல்லாவிபத்துக்களையும் தப்பி க்ஷேமமாக வாழ்வீர்கள். வீரவிஜயா, நீதான் எனது ஆயுதம். உனக்கு ஒரு புதிய ஆயுதம் வேண்டும். அதை நீ அடைவாய். **வியாசர்** வருவார். அவர் சொல்லுகிறபடியே முயற்சிசெய்!

பாரதப்போர் வேண்டும்—தருமம்
பாரையாள வேண்டும்.
தீர்வாழ வேண்டும்—கொடிய
தீயர்விழ வேண்டும்.

**எல்லாரும்:** கண்ணன் இச்சை நிறைவேறட்டும்!

**விஜயன்:**

வின்னும் மண்ணும் வெல்ல—வீர
வில்லும் விருங் கொண்டோம்
கண்ணை அன்புங் கொண்டோம்—இனிக்
கவலை சற்றும் உண்டோ?

**கண்ணன்:** அன்பர்காள் நம்பியிருங்கள்.....ஆ! குசேலர் என்னை நினைக்கிறார். உடனே செல்லவேண்டும். சுபத்திரை அபிமன்யு இருவரையும் அழைத்துக் கொண்டு இதோ செல்லுகிறேன். அன்பர்காள்! அம்பைத் திட்டிவைத்துக்கொண்டே, என் அருளை நம்பி, எனது சங்கொலியை எதிர்பார்த்திருங்கள்!

**விஜயன்:** கண்ணா உன்னுடன் வாழ்வதே வாழ்வு. உன்னைப் பிரிவது சாவு.

**கண்ணன்:**

அன்பர் என்னை அரைக் கணம் பிரியார்.
அன்பர் அழைத்ததும் அக்கணம் வருவேன்.

[கண்ணன் தியானிக்கிறான்]

**எல்லாரும்:** கண்ணா நீயே துணை; உனது திருவடியே காப்பு!

உன்னடியில் அன்புவைத்தேன் கண்ணபரமாத்மா
உலகெல்லாம் நீயெனக்குக் கண்ணபரமாத்மா!

வன்னமலர்க் காலையிலே கண்ணபரமாத்மா
வருகுதுன் இன்பமணம் கண்ணபரமாத்மா!

பொன்பரவும் அருணனிலே கண்ணபரமாத்மா
பொலியுமுன தருளழகே கண்ணபரமாத்மா!

மின்னொளிரும் மேகத்திலே கண்ணபரமாத்மா
மின்னுவதுன் கண்ணொளியே கண்ணபரமாத்மா!

காற்றினிலுன் பூங்குழலே கண்ணபரமாத்மா
காதில்வந்து கொஞ்சுதப்பா கண்ணபரமாத்மா!

ஆற்றினிலுன் வேதவொலி கண்ணபரமாத்மா
ஆத்மசுகம் பேசுதப்பா கண்ணபரமாத்மா!

நாற்றிசையு லகினிலும் கண்ணபரமாத்மா
நடப்பதெல்லாம் உனதியக்கம் கண்ணபரமாத்மா!

போற்றிஎன் உயிர்க்கிறைவா கண்ணபரமாத்மா
புதுப்பிறவி எனக்கருளாய் கண்ணபரமாத்மா!

[எல்லாரும் வணங்கல்: கண்ணன் அனைவரையும் ஆசீர்வதித்துச் செல்லுகிறான். எல்லாரும் வழி நடத்திச் செல்லல்.]

## காட்சி உ. பாண்டவர் போர்ப்பயிற்சி

[சரஸ்வதி நதிக்கரை, காடு, அங்குமிங்கும் பாறைகள். புலி, நரி, மான், சிங்கம், காட்டானைகள் நடமாடுகின்றன. பாண்டவர் போர்ப்பயிற்சி செய்கின்றனர். பாஞ்சாலி மலர்மாலைகோத்து வென்றவருக்குப் போடுகிறாள். நகுலனும் சகாதேவனும் கத்திவிளையாடல்.]

**பீமன்:** அப்படி! சகாதேவா, விடாதே! வாளை எட்ட வீசு!

விஜயன் : சபாஷ் நகுலா! நீ பக்கா குதிரை வீரனல்லவா? ....வாளை இடதுபுறம் சுழற்றி முன்னே தாவு!

பீமன் : தருமண்ணு, தம்பிகள் எப்படி?

தருமன் : இரண்டுபேரும் சரியான வீரரே. சகாதேவனுக்குப் பொறுமை அதிகம்.

பீமன் : அண்ணுவுக்குப் பொறுமைக் காதல்! எனக்குப் போர்க் காதல்! கண்ணே பாஞ்சாலி, சொல் யார் நல்ல வாள் வீரன், நகுலனு சகாதேவனு?

பாஞ்சாலி : போர்வரட்டும்; சொல்லுகிறேன்.

[நகுல சகாதேவர் மிகவும் உற்சாகமாக விளையாடுகின்றனர். பாஞ்சாலி எதையோ பார்க்கிருள்]

நகுலன் : ஹா! விட்டேனு பார், அந்தக் கௌரவக் கும்பலை? வாழைக்குலைமாதிரி சாய்ப்பேன். இதோ பிடி.

விஜயன் : ஹல், அப்படிச் சொல் தம்பி!

ச்கா : நீ துரியோதனனுனல், இந்தா இப்படி ஒரே ஒரு இடக்கை வீச்சில் கரும்புமாதிரி வெட்டிவீழ்த்தி, நானே இரத்தந்தடவிப் பாஞ்சாலி கூந்தலை முடிப்பேன்.

பீமன் : சபாஷ் சகாதேவா! அப்படிச் சொல்லு வீரச் சிங்கம்! பாஞ்சாலி, எப்படி?

பாஞ் : ஆ! அதோ பாருங்கள்! அந்தப் பெண்மானை ஒரு புலி தூரத்திச் செல்லுகிறது. புலியைக் கொன்று மானை எனக்குக் கொண்டுவாருங்கள்!

**பீமன்:** இதோ! நகுலா சகாதேவா, இடப்புறம் வளை யுங்கள்! நானும் விஜயனும் வலப்புறம் வருகிறோம். தருமண்ணா, மானைப் பிடியும்! நான் புலியைப் பிளக் கிறேன்.

[ஓடுகிறார்கள்]

**எல்லாரும்:** ஹேய்! ஹேய்!

**பாஞ்:** வீராதி வீரர் எனது கணவர். இருந்துமென்ன? அரசைப் பறிகொடுத்து, அரணியத்தில் இந்த விலங்கு களுக்கிடையே வனவேடர்போலே வசிக்கின்றனர். விதி விதி!

[திரைக்குப் பின்னால் "ஹா! ஹூ! ஹர்ர்!" என்று பீமனும் புலியும் சண்டையிடும் சத்தம். விஜயன் மானைத் துரத்தும் சத் தம். நகுல சகாதேவர் கொம்பூதுகின்றனர்.]

**பாஞ்:** புலி இறந்தது. மான் பிழைத்தது. வருகின்ற னர் கணவர்.

[விஜயன் மானுடனும், தருமர் மான் குட்டியுடனும், நகுல சகாதேவர் அம்பு, வில், வாள் முதலிய ஆயுதங் களுடனும் வருகின்றனர்.]

**விஜயன்:** இதோ மான். கண்ணே, வெற்றிமாலை தா!

**பாஞ்:** வெற்றி விஜயருக்கே!

[மாலை சூட்டுகிறாள்]

**தருமன்:** பாஞ்சாலி! இந்தா குட்டி; பாவம், இதை ஒரு ஓநாய் துரத்தியது; காப்பாற்றினேன். இதனுடன் நீ விளையாடு!

**பாஞ்:** அந்தத் துஷ்ட ஓநாய்க் கூட்டத்தினின்றும் இந்த மானைக் காக்க ஒரு வழி யில்லையா?

[பீமன் ஒரு பெரிய புலியைத் தூக்கிக்கொண்டு வருகிறான்]

**பீமன்:** உண்டு; இதோ வழி. இந்தப் புலிதான் துரியோதனன். தொடையில் அடித்து விழ்த்தினேன். என்னைக் கௌவத் திறந்த வாயைக் கிழித்தேன். "ஒழி துரியோதனா!" என்று ஒரே குத்தில் கொன்றேன்.

**பாஞ்:** இந்தாரும் வீரமாலை! இந்தப் புலித்தோலில் அமர்ந்து நான் காலசக்தியை உபாசிக்கிறேன்.

**தருமன்:** மான் குட்டி வேண்டாமா? பீமா, இதைப் பார்! சாது....

**பீமன்:** அண்ணாவைப்போல் சாது. பொறுமை! அதனாலேதான் அந்த அப்பாவிப் பிராணியைச் சிங்கமும், புலியும், ஓநாயும், நரியும் பற்றிப் பலகாரம் பண்ணுகின்றன.

**பாஞ்:** ஹி! ஹி! உண்மை. பிரம்மதேஜஸ் தருமத்தை விளக்கும். க்ஷத்ரியபலம் அதைக் காக்கும். பகவான் கிருஷ்ணர் தெரியாமலா கம்ஸனைக் குத்திக்கொன்றார். அன்று சபையில் கண்ணன் இல்லையே?

**பீமன்:** நான் இருந்தேன். விஜயன் இருந்தான். அண்ணா இருந்ததால் இல்லாதவர்போலானோம். பலம்வேண்டும்; தேகபலம் வேண்டும். அரக்கரை நசுக்க வேண்டும்.

**தருமன்:** மெய்தானப்பா, முதலில் தருமபலம், தெய்வ பலம், பிறகு புத்திபலம், ஆயுதபலம், தேகபலம்

காட்டவேண்டும். சாமதானபேத உபாயங்களைச் செய்து பார்த்த பிறகே தண்டோபாயத்தைக் கையாள வேண்டும். பகைவனுக்கு, தருமம் தலைகாக்கும் என்று இதோபதேசம் செய்யவேண்டும். பிறகு பகவானை வேண்டி அவன் மனம் திருந்துமட்டும் பொறுக்கவேண்டும்.

**பீமன் :** அதற்குள் அவன் நம்மைச் சரிபண்ணி விடுவான். அண்ணு, இது மஹா பலசாலிகளுக்கே காலம். நாம் கண்ணயர்ந்தால், அடுத்தவன் கழுத்தில் கத்திவைப் பான். துரியோதன ராஜ்யத்தில் நீரும் விதுரரும் பேசும் பேச்சை யார் கேட்பார்? அசுரப்படைகள் தாயின் இரத்தத்தை உறிஞ்சுகின்றன. தயை தாட் சிணியம், இரக்கம், பொறுமை யெல்லாம் உமது ராஜ் யத்தில் நடக்கும்.

**பாஞ் :** வனவாசந் தாண்டியல்லவா அந்தப் பேச்சு?

**பீமன் :** பத்தினி! நாளையே தருமராஜ்யம் மீளும். அண்ணு ஒரு வார்த்தை சொல்லட்டும்!

[யானைச் சத்தம்]

**பாஞ் :** (காட்டை நோக்கி) ஹா! அதோ ஒரு மதயானை வெறிபிடித்து வருகிறதே, ஓட்டுங்கள்!

**பீமன் :** ஓட்டவா, ஒழிக்கவா?

**தருமன் :** நமது அருகே வராமல் துரத்தியடி போதும்.

**விஜயன் :** அலறி ஓடுதுபார் யானை.

[ஈட்டி வில்லுடன் இருவரும் செல்லல்.
திரைக்குப் பின்னுல் மதயானை "ஹார்"

என்று பிளிறல். பீமன் அதைக் குத்தி விரட்டுகிறுன். யானை ஓடிப்போகிறது.]

**தருமன்:** நமது தொழில் போரே. சண்டமாருதம் அடிப்பதற்கு முன் ஆகாயம் அமைதியைக் காட்டும். அது போலே நாம் பொறுமையைக் காட்டி.....

[பீமனும் விஜயனும் யானைத்தந்தம் கொண்டுவருகின்றனர்]

**பீமன்:** இந்த மதயானைக்குப் பொறுமை காட்டினுல் என்னவாகும்? இதோ, அதை ஒரு குத்துவைத்துக் கொம்பை ஒடித்தோம். யானை அலறி ஓடியது. பாஞ்சாலி இந்தா யானைக்கொம்பு! இதை மணிகளாகச் செதுக்கி உனக்கொரு அன்பு மாலை போடுகிறேன்.

**விஜயன்:** கண்ணே இந்தா நான் ஒடித்த கொம்பு!

**பாஞ்:** இதை வாளுக்குப் பிடியாக்கிப் பாரதப்போரில் சுழற்றுங்கள்! கண்குளிரக் காண்கிறேன். இருவருக்கும் ஜயமாலை!

[மாலை போடுகிறுள்]

**பீமன்:** நன்ருகச்சொன்னுய். அண்ணு கேட்கட்டும்!

**தருமன்:** கேட்கிறேன்.....சிந்திக்கிறேன்.....காலம் பார்க்கிறேன்.

**விஜயன்:** அண்ணு, காலம் கலியை எட்டிப்பார்க்கிறது. அம்பிற்கு அம்பு, வாளுக்கு வாள், உதைக்கு உதை, மிதிக்கு மிதி கொடுத்தாலே அரக்கர் அடங்குவர். பகைவன் ஒருகணை பாய்ச்சினுல் நான் பத்துச் சுடு

கணை பாய்ச்சுவேன். அவன் ஒரு அடி கொடுத்தால் நான் நூறடி பளிச்சுப்பளிச்சென்று தருவேன்.

பீமன்: அப்படிச் சொல்லடா வீர விஜயா! என் கண்மணித் தம்பி, அப்படிச் சொல்லு; தம்பிமார்களா! நமக்கு இருப்பு நரம்புகள் வேண்டும். வைரக்கட்டிகள் போலத் திரண்டுருண்ட தசையுறுதி வேண்டும். மலைப் பாறைபோல் தோள்கள் வேண்டும். இருப்புலக்கை போலக் கையுறுதிவேண்டும். ஒரு குத்து விட்டால் எதிரி பொரித்த அப்பளம் மாதிரி நொறுங்க வேண்டும். ஒரு மிதி மிதித்தால் புல்லருக்குப் புதைகுழி பறிக்கவேண்டும்; பலத்தைப் பெருக்குங்கள்! பகைவர் நடுநடுங்கும்படி சூரப்புலிகளாயிருங்கள்!

தருமன்: பலம் வேண்டும்; பக்தி, பூஜை இவையும் இருக்க வேண்டும்.

பீமன்: என் பூஜையைக் கேளுங்கள்: கடவுள் எங்கும் இருக்கிறார். "கடவுளே, அருவி, ஆறு, கடல். எல்லாம் உனக்கே அபிஷேகம்" என்பேன். ஆகாசத்தைக் கண்டால் "கடவுளே, இந்த நீலப்பட்டாடை உனக்கே" என்பேன். மலையைக் கண்டால் "நமச்சிவாய" என்பேன். பயிர் பச்சைகளைக் கண்டதும் "உனக்கே நிவேதனம்" என்பேன். பூக்களைக் கண்டால், "கடவுளே, என் அர்ச்சனையை ஏற்றுக்கொள்!" என்று மனதால் மலர்தூவுவேன். சூரியசந்திரரைக் கண்டால், "கற்பூர தீபாராதனையை ஏற்றுக்கொள்! ஓம் சிவம்" என்பேன். நான் இப்படியே சதாகால பூஜை பண்ணி வருகிறேன். தினம் இந்தக் கதையைப் பதினாயிரம் தடவை சுழற்றிப் போர்ப்பயிற்சி செய்வதே எனது

பகிரங்க பூஜை. உடலே கோயில்; பலமே தேவதை. அதையே உபாசிக்கிறேன். இந்தப் பலம் சதா துரியோதனனைத் தேடுகிறது.

**தருமன் :** இந்தப் பாறைதான் துரியோதனன். என்ன செய்வாய் ?

**பீமன் :** இதோ ஒரு முண்டாக் கொடுக்கிறேன். பாறை குலைகிறது. கதையால் ஒரே அடி ! நொறுங்கு ! ஆ !.... இப்படியே அந்தத் துஷ்டன் எலும்புகளை நொறுக்குவேன்.

**தருமன் :** அவன் தனி ஆளா ? ஏராளமாகச் சேனுபலம் உள்ளவனல்லவா ?

**விஜயன் :** இதோ காண்டீபம் ! கணை ! அத்தனை சேனைகளையும் பிய்த்தெறியும். ஒரு கணை விடுகிறேன்.

[கணை ஒரு மாத்தைத் துளைத்துச் செல்லுகிறது]

**பாஞ் :** பீமன் கதை, விஜயன் வில் ; இரண்டுபோதும். கௌரவக் கும்பலை அழிக்க.

[வியாசர் வருகிறார்]

**வியாசர் :** போதாது, போதாது. என் செல்வர்காள் ! இன்னொரு சக்தி வேண்டும்.

**தருமன் :** பகவான் எழுந்தருள வேண்டும் !

**எல்லாரும் :** வணக்கம், வணக்கம். வியாசபகவானே, வாரும் பர்ணசாலைக்கு !

**வியாசர் :** ஆயுதங்களை வைத்துவிட்டு நதியில் நீராடிப் பரிசுத்தமாக வாருங்கள் ! கண்மணிகாள், வீரவிஜயா....

உங்களுக்கு ஓர் அரிய வரங்கொண்டு வந்திருக்கிறேன்.

**எல்லாரும்:** முனிவர் ஆணைப்படியே. இதோ தங்களுக்கு ஆசனம் அளித்துச் செல்லுகிறோம்.

[எல்லாரும் செல்லல்]

## காட்சி ௩. உபதேசம்

[வியாசர் தியானத்தில் அமர்ந்துள்ளார். எதிரே சிவலிங்கம் உள்ளது. பாண்டவர் திருவலம் வந்து வில்வந் தூவி வணங்குதல்.]

**பாண்டவர்:**

பாரத நாட்டின் ஞானப் பரிதியே போற்றி! எங்கள்
தாரக மாக வந்த தவச்சுடர் விளக்கே போற்றி!
ஆரணம் வகுத்தாய் போற்றி! அருங்கலை யளித்தாய் போற்றி!
பூரண யோகி யான புலவனே போற்றி! போற்றி!

**வியாசர்:** தர்மாத்மாக்கள் வாழ்க!

**தருமன்:** பகவானைக் கண்டதும் பகல்கண்ட பதும மானோம்.

**வியாசர்:** குறைவில்லாமல் இருக்கிறீர்களா? தைரியமாயிருங்கள்!

**தருமன்:** தேவரீர் அருளால் குறைவில்லை, அச்சமில்லை. இறைவனடி பற்றி இங்கே இருக்கிறோம். எங்களை நம்பி வந்த அந்தணருக்கும் முனிவருக்கும் அக்ஷய பாத்திரம் அன்ன மளிக்கிறது.

**பீமன்:** பகவானே அன்னவிசாரமில்லை. மனத்தில் உள்ள குறைதான் தீரவேண்டும். முக்காலம் உணர்ந்த முனிவ, போர் வருமா?

விஜயன் : வேதங்களை வகுத்து, புராணங்களை எழுதி, பிரம சூத்திராதி கிரந்தங்களை அருளிய ஞானச்சுடரே! உலகம் அசுரமாயத்தால் அல்லற்படுகிறதே. எங்கள் ஆயுதங்கள் உறங்குகின்றனவே. மனத்தில் ஒரு தீ பற்றி எரிகிறதே. அது 'போர் போர்' என்று குமுறுகிறதே. காலம் எப்படி முடியுமோ? தங்களுக்கே தெரியும்.

வியாசர் : அறவோர் பொறுமையே வெல்லும். போர் மூளும். அதர்மப் பதர்கள் வேரோடழிவர். அன்பீர், அதற்கே சகுனி பகடையுருட்டினான். பத்தினிப் பெண்ணைச் சபையில் இழுத்து வந்தபோதே, துச்சன் துயிலுரிந்தபோதே, அதைக்கண்டு சுயோதனப்பதர் சிரித்தபோதே, நீங்கள் பொறுத்தபோதே, நீங்கள் வனம்புகுந்தபோதே, தருமதேவதை கண்ணீர் விட்டாள். அக் கண்ணீரே தீ வெள்ளம் போன்று அதர்மப் புதர்களை அள்ளி விழுங்கும். ஆனாலும், நீங்கள் கவனமாயிருக்க வேண்டும்! ஒரே காட்டில் தங்காதீர்கள். துரியோதனன் உங்களைக் கொல்லக் கத்திதீட்டி அலைகிறான். நேற்று விதுரன் இங்கிருந்து வந்தான்; புத்தி சொன்னான். உங்களுடன் சூழ்ச்சி செய்து வந்திருப்பதாக அவனை வைது, ஒரு பெரிய சேனைகொண்டு ஆத்திரமாக உங்களைக் கொல்லப் புறப்பட்டான். நான் தடுத்துக் கண்டித் தனுப்பினேன்.

பீமன் : ஆஹா! அவன் வந்திருந்தால் என் கதை பசியாறுமே! பகவானே, தங்கள் கருணையால், சிவனருளால் கண்ணன் அருளால், தரும தேவதையின் மனங் குளிர கிர்மீரனுக்கான கதி அவனுக்கும் ஆயிருக்குமே.

பாஞ்சாலியை மடிமேல் உட்காரச் சொன்ன அவன் நாக்கைத் துண்டித்திருப்பேன். அவன் தொடையைப் பிளந்திருப்பேன். பத்தினியைத் தொட்டிழுத்த அந்தத் துச்சன் கையை முறித்திருப்பேன். பாஞ்சாலி கூந்தலை நானே இரத்தமாட்டி முடித்திருப்பேன்.

வியாசர் : குழந்தாய், உன் கதையும் உதையும் வலுத்தனவே! அரக்குமாளிகைச் சூழ்ச்சிகூட உன்னிடம் பலிக்கவில்லை. உங்களிடம் தருமபலம் உள்ளது. ஆனாலும், துரியோதனன் சூழ்ச்சியில் இணையற்ற கொடியன். சிறுகுழந்தைமுதல் அவன் பொறாமைவெறியன். உங்கள் உயிருக்கு உலைவைப்பதே தொழிலாயுள்ளான். தீமையே அவனியல்பு.

தருமன் : இறைவனருளால் வனவாசமும் அஞ்ஞாதவாசமும் செய்து வந்து அவனுக்கு நல்லவார்த்தை சொன்னால் திருந்தமாட்டானா? எங்கள் அரசைத் தரமாட்டானா?

வியாசர் : உங்களை ஊருக்கே வரவிடமாட்டான். அரசையும் தரமாட்டான்.

தருமன் : இருக்க வீடாவது தரமாட்டானா?

வியாசர் : காலடி வைக்கக்கூட இடந்தரமாட்டான் கிராதகன்.

விஜயன் : கண்ணன் தூதுசென்று கேட்டால்?

வியாசர் : வணங்காமுடி மன்னன் யாரையும் மதியான்; போரே வேண்டுவான்.

விஜயன் : 'போர் போர்' என்று நாணேற்றிய காண்டீபம் முறையிடுகிறதே. பகவானே அந்தநாள் வரட்

டும்! 'விண்விண்' என்று நாண் தெறித்து, இடி மின், னல்களைப் போலக் கணைவிட்டு, கௌரவக் கும்பலை அழிக்கிறேன்.

**வியாசர் :** வீர விஜயா! உன் அம்பிற்கு ஆற்றல் உண்டு; பீமன் கதைக்குப் பலம் உண்டு; என்றாலும் வரும் போர் கடும்போர். பாம்புக் கொடி படைவலி மிக்கது. துரோணர், பீஷ்மர், அசுவத்தாமர், வில்வித்தையிற் சிறந்த கர்ணன் முதலிய சூரர்கள் அவன்பக்கம் இருக்கிறார்கள்—சோற்றுக் கடனுக்காக.

**விஜயன் :** எங்கள் பக்கம் கண்ணன் உள்ளான்.

**வியாசர் :** மெய்தான். எல்லாம் கண்ணன் லீலைதான். அவனே போருக்குச் சங்கூதுவான்; ஆனால் சக்கரமெடுக்கமாட்டான். உங்கள் பக்கமிருப்பான்; ஆனால் சண்டைபோடாமல் சாட்சியாகத் தேரோட்டுவான். அவனருள் உங்களுக்கு உண்டு. ஆனாலும் சிவனருள் வேண்டும். அசுரமாயத்தை அழிக்கவல்லது சிவக் கனலேயாம். விஜயா, வீரா! நீ உத்தமன், சத்தியவான், தியானசிலன், பரமபக்தன், வைராக்கியவான். நீ உடனே சென்று சிவனருளைப் பெறவேண்டும்.

**விஜயன் :** சிறியேன், அறியேன். எவ்வாறு சிவனருள் பெறுவேன்? மார்க்கண்டேயர் போலத் தவமிலேன்.

**வியாசர் :** வீரமணியே! உனக்குத் தவம் வளரும், சிவம் ஒளிரும்.

**விஜயன் :** குருமணியே, அடியேனுக்குச் சிவ ஞானத்தை விளக்கி யருளவேண்டும். சிவம் என்றால் என்ன? அதன் இயல் பென்ன? எங்கேயுள்

ளது? எப்படி அதைப் பெறுவது? எல்லாரும் பெறலாமா?

**வியாசர்:** அன்புமணியே கேள்! 'சிவம்' என்பது மாசற்ற இன்பம், உண்மை, அறிவு. உலகில்தோன்றிய வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள், தத்துவப் பெரியார் அனுபவங்கள், அருட்கவிகள், கலைகள் எல்லாம் நாடும் இன்பப் பொருளே சிவம். அது எல்லாருக்கும் பொதுவான சுத்த சமரஸ சன்மார்க் கப்பொருள். அது எல்லை யற்றது, யாதும் ஆனது, எங்கும் உள்ளது, எல்லாம் வல்லது, ஒப்புயர் வற்றது, தானேதான் ஆனது, பிறப்பிறப்பற்றது. ஆக்கல், அளித்தல், நீக்கல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில் புரிந்தும் சிவம் இயல்பாக இருந்த படியே இருப்பது.

**விஜயன்:** குருமணியே, இருந்தபடியிருந்து எல்லாம் ஆவ தெப்படி? எங்கும் இருப்ப தெப்படி?

**வியாசர்:** அன்ப! சூரியன் ஆகாசத்தில் இருந்தபடி யிருக்கிறன். அவன் கதிர்கள் பரவி, ஒளியும் சூடும், மேகமும் மழையும், பயிர்வளமும் உயிர்வளமும், அளிக்கின்றன. அதுபோலவே சிவனுடன் இணை பிரியாத சக்தி யுள்ளது. அதையே அருள், ஆணை, பரமாகாசம் என்பர். அதன் மூலமே அவன் எங் கும் பரவியிருக்கிறன். எல்லாம் புரிகிறன். சிவம் அமைதிப்பொருள். சக்தி ஆடற்பொருள். உலக மெல்லாம் சிவசக்தி விலாசமேயாம். எல்லாவுயிர் களும், எல்லா உலகமும், எல்லாப் பொருள்களும்

சிவனருள் ஆட்டமேயாம். எல்லாம் அவனருள் விளக்கமே.

**விஜயன்:** குருமணியே, சிவமும் சக்தியும் ஒன்றானல், சக்தியைத் தொழுந்தோறும் சிவனை அடையலாமே! இங்கே ஒன்றா இரண்டா என்ற சந்தேகம் உண்டா கிறது.

**வியாசர்:** அன்ப, உள்ள பொருள் ஒன்றே. அதன் அருள் விளக்கமே பலவாம். தங்கம் ஒன்றுதான்; நகை நாணயங்கள் பலவாம். சக்தியன்பரும் சிவத்தை அடைவார். கதிரை அறிந்தவர் கதிரவனை யும் காண்பார். கனியும் சுவையும்போன்றது சக்தி யும் சிவமும். வேதம் எதைப்பரப்பிரமம் என்னுமோ, அதுவே சிவம். மஹாத்மாக்கள், அரியதவயோக சித்திகளால் எந்தப் பரமானந்தப் பொருளை உள்ளும் புறமும் உணர்வாரோ அதுவே சிவம். காலத் தேரின் உருளைகள்போன்ற கதிரும் மதியும், உலகை இயக்கும் பஞ்சபூதங்களும், ஆன்மத் தொகுதியும் இறைவன் வடிவங்களாம். இவை எப்படிப் பொதுவோ அதேபோலச் சிவமும் பொதுவாகும். எல்லாரும் அதைப்பெறலாம்.

**விஜயன்:** பரமாசாரிய, எங்கும் இருக்கிற எல்லையற்ற சிவத்தை நாம் எங்கே காண்பது? எப்படிக் காண் பது?

**வியாசர்:** அன்பா, உன் உள்ளத்திலேயே அதைக் காண லாம். இதயமே சிவநிலையம். புலன்கள் அலையா மல் மனத்தில் அடங்கி, சித்தம் நிலைத்து அமைதியாக

உள்ளே கவனித்தால் அதுவே தியானம். அதனால் உள்ளத்தில் ஒரு துடிப்பு உணர்வாகும். அதுவே திருவடி நடனம். 'நான்' என்றுநெஞ்சைத் தொட்டுப் பேசும் அந்த இடத்தில் மனம் லயித்ததும் உன்னுள் ஒரு விறுவிறுப்பான இன்பவூற்றெழும். அதுவே அருட்சக்திக் கனலாகும். பிறகு அக்கனலையும் இதயத்தையும் கவனித்திருந்தாலேபோதும். அந்த அருள் சிவத்தை விளக்கும். முதலில் "நம: சிவாய" என்று சரண்புகவேண்டும். உடலை அவன் கோயிலாகவும் உள்ளமே மூலஸ்தானமாகவும், அதில் சிவமே இலிங்கமாகவும் பாவிக்கவேண்டும். உடல், உயிர், மனம் அனைத்தையும் கடந்து உள்ளே யிருப்பவனே "கடவுள்." உள்ளத்தில் அவனை உணர்ந்து பார்த்தால், உலகெல்லாம் அவன் கோயிலாகவும், உயிர்களெல்லாம் அவன் மேனியாகவும் காணும்; எல்லாம் சிவமயம் என்னும் உண்மை விளங்கும். இந்தச் சித்தி பெற்றபிறகு, உனக்கு வேண்டிய வரத்தை அவனே அருள் வடிவாக வந்து தருவான்.

**விஜயன்:** குருமணியே, இச்சித்தியெல்லாம் சித்தம் நிலைத்த பிறகல்லவா? எனது சித்தம் சதா சுழல்கிறதே; மனம் அடங்கவில்லையே. மன மடங்க வழியென்ன?

**வியாசர்:** கண்மணி, மனத்தை அடக்கவே சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய சாதனங்களைப் பெரியார் கண்டனர். தீவிரமான அன்பு, ஆர்வக்கனல், சிவனே உண்மை என்னும் உறுதி, அவனை அடைவதே இன்பமாகும், அவனன்றி மற்றவெல்லாம் அற்பம் என்னும் வைராக்கியம், சாத்வீக ஆகா

ரம், வெளிவிகாரங்களை ஒழித்து உள்ளடங்கியிருக்கும் ஏகாந்தம், ஓர் உருவில் அவனைப் பாவித்தல், அதையே உள்ளத்தில் இருப்பதாகத் தியானித்தல், மௌனம், விருப்புவெறுப்பில்லாத சமநிலை, ஜபசாதனம், பிராணுயாமம், கோயில் வழிபாடு, சிவஞானசிந்தனை குறித்த ஆஸனத்தில் நிமிர்ந்திருந்து இதயத்தில் அவனை உபாசித்தல் ஆகிய சாதனங்களால் மனம் குவிந்து சித்தம் தெளியும், அருள் பொலியும்.

**விஜயன் :** மஹாத்மாவே, எனக்கு ஜபசாதனந்தான் பிடித்திருக்கிறது. சிவமந்திரத்தை உபதேசித்தருளுக. இடைவிடாமல் அதையே ஜபித்து மனமடங்கிக் கைலையில் அமர்ந்து அவனருளை நோக்குகிறேன்.

**வியாசர் :** சொல்! ஓம் நம சிவாய, ஓம் நம சிவாய!

**விஜயன் :** ஓம் நம சிவாய, ஓம் நம சிவாய.

**வியாசர் :** இதுவே மஹாமந்திரம். இதை நின்ற நிலையில் தினம் 10000 ஜபித்து வா. தியானம் தன்னுல் உண்டாகும். அருட்கனல் பிறக்கும். இதய நடனம் காண்பாய். இதயேசனை சிவனைக் காண்பாய். பிறகு 'சிவோஹம், சிவோஹம்' என்று ஜபம் செய். அதனுல் அருட்கனல் இதயத்தினின்றும் புருவத்திற்கேறும். அங்கே ஒளி காணும்; அதன் பிறகும் தீவிரமாக சிவோஹம் பாவனையில் இரு. அருட்கனல் உச்சியில் சஹஸ்ராரத்திற் சேரும். அப்போது ஓம் ஓம் என்று பரநாதம் கேட்கும். முச்சுடர்காணும். பரமானந்தக் கனல் உடலெல்லாம் பாயும். உலகெல்லாம் சிவ

மயமாகக் காண்பாய். உன் இதயத்துடிப்பு சிவோ ஹம் சிவோஹம் என்று தானுகவே ஜபம் செய்யும்.

**விஜயன்:** பரமகுருவே! ஓம் நமசிவாய என்று சிவனைச் சரண்புகுந்து உட்குவிந்து அன்புசெய்வேன். அது சித்தியானதும் சிவோஹம் என்ற ஜபசாதனம் தொடங்குவேன். அது சித்தியானதும் சிவமயம் என்ற அனுபவங்காண்பேன். இந்த அனுபவம்பெற வைராக்கியம் பூண்டுள்ளேன். ஆனுல் உள்ளத்திலும் உலகெங்கும் உள்ள சிவன் என்முன்னே வந்தல்லவா வரந்தரவேண்டும். அவன் எப்படி வருவான்?

**வியாசர்:** அவன் எல்லாம் வல்லவன். அவன் திருவிளை யாட்டை யார் சொல்லமுடியும்? அவன் உருவாய் வருவான்; அருவாய், தோன்ருத்துணையாய் நின்று உதவுவான். ஆனுல் அவன் உணர்வும் வரவும் உனக் குத் தெரியும். அவன் அன்பருடன் விளையாடுவான், சோதிப்பான். நீ வீரன், அன்பன். விழித்திரு. உனக்கு வேண்டியவரத்தை அவன் முடிவில் தரு வான்.

**விஜயன்:** பகவன், நான் வேண்டிய வரம் அதர்மத்தை வீழ்த்தித் தருமத்தை நிலைநாட்ட தெய்வசக்திபெற்ற ஆயுதந்தான். பாரதம் வரும். அதற்குச் சிவன் எனக்கு அஸ்திரம் ஒன்று தந்தால் போதும்.

**வியாசர்:** அன்ப, சிவபெருமான் காட்சியளிப்பான். 'வரங்கேள்' என்பான். எம்பெருமானே தங்கள் சக் திக் கனலைப்பெற்ற சிவாஸ்திரமே நான் வேண்டுவது. அதனுல் அசுரமாயத்தை அழித்து அறத்தையும் அன்

யையும் நிலைநாட்டவேண்டும். அருள்புரிக!' என்று வேண்டிநில். இதுவே உபதேசம்.

**விஜயன் :** குருமணியே! உபதேசம் பெற்றேன். என்மனத்தில் எப்போதும் நினைக்க சிவஞானசாரத்தைச் சில வரிகளில் எழுதித் தரவேண்டும்.

**வியாசர் :** இதோ தருகிறேன். சிவோஹம். சிவோஹம்.

[தியானித்திருந்து எழுத்தாணி
பிடித்து ஓலையில் எழுதுகிறார்]

சதாசிவம் என்பது சச்சிதானந்தம்.
இதயந் தோறும் பொதுநடம் புரியும்;
அதன் விளையாடலே அருயிர் வாழ்க்கை.
அகில மெல்லாம் அதனருட் கோயில்.
சுத்தம் அதுவே; சக்தி அதனருள்.
சாதி சமய பேதமொன் றில்லை;
சிவாய நமவெனச் சிந்தனை செய்வாய்.
ஓமும் கனலும் ஒளியும் சுகமும்
யோகமும் சுத்த போகமும் வளரும்.
உன்னைக் கொடுத்ததும் தன்னைக்கொடுப்பான்.
அன்பைப் பெருக்கி ஆணவஞ் சுருக்கி,
அவனரு ளின்றி யானிலை யென்றே
சித்தமடங்கிச் சத்த மடங்கிச்
சுத்த மனத்தை வைத்துள் ளிருப்பாய்;
அதுவே தியானம்; அதனால் எய்தும்
சிவோஹம் பாவனை, சிவமயங் காணும்.
அவனருள் விளக்கமே யாவும்
சிவசிவ சிவவெனச் சிந்தைசெய் மனமே...

இதுவே சிவஞானச் சுருக்கம். இயானித்துப் பயன் பெறு. விஜயா, இன்று நல்ல நாள்; இதோ நல்ல வேளையும் வந்தது. புறப்படு இமாலயத்திற்கு!

**விஜயன்:** குருமணியே, குருதட்சிணையாக என்னையே தருகிறேன். சென்று வருகிறேன். சகோதரர்காள்! கைலை சென்று சிவாஸ்திரம் பெற்று வருகிறேன்.

**தருமன்:** முனிவர் சொன்னபடியே தவசித்தி பெற்று வா.

**பீமன்:** விஜயா, உன் தவத்தால் நமது விரதம் நிறைவேறட்டும். இந்தக் கதைக்குச் சரியானவேலை வரட்டும். சென்றுவா.

**நகுலன்:** அண்ணா, நீ ஜயபுருஷன். உன்னாலேயே பாரதம் வெற்றிபெறவேண்டும்.

**சகாதேவன்:** அண்ணா நல்ல யோகவேளை வந்தது. இருந்தும், நடந்தும், இடைவிடாமல் பஞ்சாக்ஷரி ஜபம் செய்து சிவனருளைப் பெறு. எல்லாம் சித்திக்கும்.

**விஜயன்:** சகோதரர்காள், சிவாஸ்திரம் பெற்று வருகிறேன். பாஞ்சாலி, உன் குழல் முடியுங் காலம் சீக்கிரம் வரும்; வருகிறேன்.

**பாஞ்சாலி:** வந்து ஜயபேரிகை கொட்டுங்கள். பகவான் அருளுக!

**விஜயன்:** எல்லாருக்கும் அன்பு, நன்றி, வணக்கம். பகவானே,

முனிவனே, சுத்த ஜீவன் முத்தனே, சிவஞா னத்தை
இனிதெனக் கீந்தாய் போற்றி! இறையருட் கணைபெற் றுய்யப்
பனிமலை சென்று மீள்வேன்; பகவநின் பாதம் போற்றி.
கனிதவக் கனலை யீவாய், கருணையங் கடலே போற்றி!

[வணங்குகிறான்]

**வியாசர்:** [ஆசிர்வதித்து] வீரா, அன்பா! தவம் வளரும். சிவன் வருவான். அம்பு தருவான். வெற்றி பெறுவாய். கண்ணன் எண்ணம் உன்னால் முடியும். சென்றுவா. வெல்க விஜயன். சிவோஹம், சிவோஹம்.

**விஜயன்:** ஓம் நமசிவாய! சிவோஹம், சிவமயம், சிவம் சிவம் சிவம் சிவம்.

[செல்கிறான். எல்லாரும் வழியனுப்புகின்றனர்]

இரண்டாம் அங்கம் முற்றிற்று.

---

# மூன்றும் அங்கம்

## காட்சி க. வெள்ளிமலையில்

[கைலையைச் சார்ந்த ஒரு மலைப்பாறையில் புல்லணை மேவி புலித்தோல் விரித்து, தவக் கோலத்துடன் விஜயன் வீற்றிருக்கிருன்]

**விஜயன் :** ஓம் நம : சிவாய ! சிவோஹம் ! சிவமயம் !

வானளாவும் பனி மலையாய்
வடிவுகொண்ட சிவமயமே,
தேனளாவும் வா நதியாய்ச்
செழித்துவளரும் சிவமயமே,
ஊனளாவும் உயிர்க்குயிராய்
உலகளாவும் சிவமயமே !
நான ளாவ வுன்வருளை
நமசிவாய மந்திரமே !

எங்கும் நீ ; எல்லாம் நீ ; உள்ளும் நீ, புறமும் நீ ; ஆகாயம் சிவாகாரம் ; மலைகளெல்லாம் சிவலிங்கம் ; ஆறுகள் சிவனருள் வெள்ளம் ; உயிர்களெல்லாம் அவனுடல். கதிரும், மதியும் அவன் விழிகள் ; உலகம் அவன் கோயில் ; கடல் அவன் கருணை ; காற்று அவன் ஓட்டம் ; கனல் அவன் வண்ணம் ; சிவமயம் ! சிவோஹம், நமசிவாய !

வானளாவிய இமாலயம் அரியணை ; அதில் சிவமும் சக்தியும் தவச் சுடராய் விளங்கி உலகை

ஆளுகின்றன. இந்தப் புண்ணிய பூமியின் வெற்றிக் கோபுரம்போல் எழுந்தோங்கும் கைலையே! வணக்கம். கௌரியே வணக்கம். சிவோஹம் சிவோஹம் என்று கர்ஜிக்கும் கங்கையே வணக்கம்! ஞானிகள் உள்ளம்போல் தெளிந்தொளிரும் மானசப் பொய்கையே, என் மனம் உன்னைப்போலத் தெளிக. அதில் அன்புத் தாமரைகள் மலர்க. அறி வன்னங்கள் ஆடுக!

சிவநிலயமே, தவநிலயமே, பனிவரையே, உன்மார்பில் வளர்ந்து பேரின்பம் பெற்ற தவயோக சித்தர் கணக்கிலர்; நானும் உன் அமைதியில் அமர்ந்து தவம் புரிகிறேன். சித்தியருள்வாய். நீ உலக வரலாற்றிற்கு அத்தாட்சி. உன்னைச் சுற்றி எத்தனையோ மதங்கள் விளங்குகின்றன; எத்தனையோ அரசுகள் எழுந்தன, விழுந்தன; கால நிகழ்ச்சிகளுக் கெல்லாம் நீ சாட்சி. என் கதையையும் நீ அறிவாய். சிவனும் சக்தியும் விளங்கும் உனது சந்நிதானமே பாரத தேசம்; அதில் இன்று சுயோதனக் கொடுங்கோல் நடக்கிறது; தர்மாத்மாக்கள் வனவாசம் செய்கிறார்கள். தர்மதேவதை அபயமிடுகிறாள். உலகில் அசுரக் கொடுமை ஒழிய, அதர்மம் அழிய, அறமும் அன்பும், நிலவவேண்டும். அதற்குச் சிவனருள் வேண்டும். சிவனைக் காணத் தவம் புரிகிறேன். அவனருள் விளங்குக.

சச்சிதானந்த சிவனே! நீ நெற்றிக் கண்ணால் திரிபுரமெரித்தாய்; அச்சம், ஆசை, ஆணவம் ஆகிய திரிபுரங்களை எரித்துச் சாம்பலாக்கு; தவக்கனல் தூண்டு; அன்பைவளர்; அருளைப் பொழி; அரக்கர் நடுங்கும்

ஆற்றலைத் தா. உன்சக்தி யருள். சிவாஸ்திர மருள். ஓம் நம: சிவாய, நம: சிவாய! சிவனே, சிறியேன் தவமறியேன், தத்துவமறியேன் உன்பெயரே என் மந்திரம்; அன்பே மலர்; ஜபமே பூஜை. நம: சிவாய!

வள்ளலே, அன்பு மலர்களைத் தூவி
வழிபடும் வழியலால் அறியேன்;
உள்ளவா றமர்ந்தே உலகெலாம் பாவும்
ஒருவனே; சச்சிதா னந்த
வெள்ளமே! வெள்ளி மலைமிசை வளரும்
விமலனே சக்தி நாயகனே
தெள்ளிய ஞானச் சோதியே போற்றி
சிவசிவ ஓம்சிவ குருவே!

[தியானிக்கிறான்]

## காட்சி உ. இந்திரன் வியப்பு

[இந்திர சபை. இந்திரன் அரியணை வகித்து விஜயன் தவநிலையைப்பற்றித் தேவகுருவுடன் சிந்திக்கிறான்.]

**இந்திரன் :** வீரன், வீரன்; அவன் வில்லும் வலியது; விரதமும் வலியது. குருதேவ, கேட்டீர்களா சிவபிரான் சொன்னதை!

**குரு :** ஆம்; இந்திரா உன் மகன் விஜயன் தவநிலை அமரருக்கும் அரியது. அரன் மனமும் இளகியது.

**இந் :** கேட்க வேண்டுமா? சிவம் என்றால் தவம் நிறைவேறியது; பரம் என்றால் உடனே வரம்; நம்பனே என்றால் அன்பனே என்று முன்னிற்பார். பஸ்மாசுரனுக்கும் பாணாசுரனுக்கும், இராவணனுக்கும் வரங்

கொடுத்த தேவன், அன்பைத் தந்தால் அனைத்தையும் தருவோன், அடியார் நேயன் தொண்டர்க்கெளி யோன், துதிப்போர்க் கினியன். அவன் அர்ஜுனன் தவத்திற்கு அருளுவதருமையோ! குருவே, என்ன தவம் புரிகிறான்!

குரு: ஆம், அற்புதமான தவம். சிவக்கோலம் பூண்டு மனத்தைச் சிவ மந்திரத்தால் கட்டிவிட்டான். முனி வர் இவனை சிவ வடிவெனப் பணிகின்றனர். ஒரு தாளின் மீது நின்று கையை மேலே நீட்டிக் குவித்து கண்ணிமையாது, மனத்தைக் கட்டிக் கடுந்தவம் புரி கிறான். முகத்தில் கனல் வீசுகின்றது. வெயில், மழை, பனி, பசி, தாகம்—எதுவும் அவனை அசைக்க வில்லை. பகீரதனும் ததீசியும் கண்டுவியக்கும் உறுதி! சுகனும் வியக்கும் புலனடக்கம்! சிவமே சிந்தை.

இந்: ஆம், சுபத்திரையின் காதலை வென்ற அர்ச்சுன சந்யாசிக்கு, அல்லியை வென்ற வில்லிக்கு, எப்படி இந்தத் தவவுறுதி நிலைத்தது? தேவர்களுக்குத் தலைவ னான நானே அன்று அகலியையிடம் மயங்கி ஆயிரம் ....நல்ல வேளையாக அது உங்களுக்கெல்லாம் கண்ணா கக்காண வைத்து என் மானத்தைக் காத்தான், கௌதமன்.

குரு: புருகூத! விஜயன் வீரன்; கண்ணனன்பன்; வியாச பகவானின் ஆசிபெற்றவன்; பீஷ்மர், துரோணர் ஆகிய பெரியோரால் போற்றப்பெற்றவன். வீரக் காதல் அவன் வாழ்வில் இயல்பான ஒரு சிறு பங்கு. அவன் மனம் தற்போது உலகை வருத்தும் அதர்ம அசுரமாயத்தை நலிக்கவே முனைந்துள்ளது.

அவனும் கண்ணனும் அதற்காகவே அவதரித்தனர். தனது வீரவுறுதியை நிறைவேற்றுந் தவமானதால் அதில் வைராக்கியமாக நிற்கிறான். அரன் அவனுக்குத் தனது அன்பை யளித்து விட்டார்; இனி அம்பையும் அளிப்பார். அதைக் கொண்டு அரக்கரை வெல்வான்.

இந் : ஆம், அர்ச்சுனன் தவம் தன்னலத்தவமன்று; பொதுநலத்தவம். பொய், வஞ்சம், போட்டி, பொறாமை, கொடுமை, அநீதி, பேராசைப் பேய்கள் உலகில் அழிநடம்புரிகின்றன. அசுரமாயம் அரசத்தோல் போர்த்துப் பூதேவியின் இரத்தத்தை உறிஞ்சுகின்றது. ஆள் வலியும், தோள் வலியும், வாள் வலியும் பெருகி, உலகைப் பாழ்படுத்தும் இவ்வரக்கமாயம் படை வலியால் நலியாது; தவவலி வேண்டும். தவராஜனான சிவராஜனது கணைபெற்றே கண்ணன் கருத்தைக் காண்டீபன் முடிப்பான்.

குரு : ஆம், கண்ணன் பாரதமாக்குவான்; ஐவரை ஊக்குவான்; விஜயனை நோக்குவான்; சிவன் கணையால் இவ்வீரன் பகைவரைத் தாக்குவான்; வெற்றியுண்டாக்குவான்; பூபாரத்தை நீக்குவான்.

இந் : உண்மை; இவ்வீரனுக்கு உலகும் நிகரில்லை. எனினும், நேற்று வரை பெண்ணாசை விடாத அர்ச்சுனனுக்கு இன்றெப்படி இந்த வைராக்யம் வந்ததென்று சோதிக்க வேண்டும்.

குரு : சோதனை யெல்லாம் ஊதி யெறிவான்.

**இந் :** பார்ப்போம். மேனகா, ரம்பா, வாருங்கள் !

[அரம்பை, மேனகை ஆடிப்பாடி வருகின்றனர்.]

**அரம்பை, மேனகை :**

பைரவி ராகம்] [ரூபக தாளம்

பல்லவி

தூது கொண்டு செல்வாய் - அன்னமே
தூது கொண்டு சொல்வாய்

அனுபல்லவி

காதலைத் தூண்டக் கனிகதை வீசி
வேதனை செய்சிவ நாதனிட மிப்போ (தூது)

சரணம்

சோலைக் குயிலுடன் சொல்லித் தவிப்பேன்
ஜோடிக் கிளிக்கவன் மோடி யுரைப்பேன்.
மாலை வசந்த மலரைப் பழிப்பேன்....
மங்கல யாழில் அவனை யழைப்பேன் (தூது)

**இந் :** நன்கு ! நடனம் நன்கு !

**அரம்பை, மேனகை :** தேவர்க்கரசே வணக்கம் ! நின் பெருமை ஓங்குக !

**இந் :** ஊர்வசி, ரம்பா, உங்களுக்கு அரிய பெரிய ஓர் அலுவல் உள்ளது !

**அரம் :** தேவதாசிகள் இறைவன் பணிக்கே ஏற்பட்டுள்ளோம்.

இந் : அழகும், கலையும், இசையின்பமும், வளர்க்கும் தேவமாதர்காள்! உங்கள் கடமையை நீங்கள் அறிவீர்கள்.

மேன : ஆம், இறைவனுக்கு இசையின்பமும், கூத்தின்பமும் நிவேதிப்பதே எங்கள் பணி. தலைவ, அழகுக் கலையை, உயிர்போலப் போற்றி வருகிறோம். இனிய குரலாலும், யாழ், குழல், கோட்டு முதலிய இசைக் கருவிகளாலும், இறைவன் பெருமையைப் பாடி தேவருள்ளம் அதில் லயிக்கச் செய்வது எமது தொழில். ச ரி க ம ப த நி என்ற ஏழு ஸ்வரங்களிற் பேசும் இவ்வின்பக்கலை எங்களுக்குப் பிரமனளித்த வரம். இக்கலை வளர்ச்சியுடன் இறைவன் கட்டளையும் செய்வோம்.

இந் : வீணா தண்டத்தின் உச்சியில், சிதாகாயத்தில், யோகிகள் கேட்கும் இசை, அணுக்களிலெல்லாம் பரவியுள்ளது. அவ்விசையின் விசையால் அணுக்கள் சுழன்று நடனமிடுகின்றன. தகராகாயமான உள்ளத்தில் ஒரு கனல் நடம்புரிகிறது. இந்த இசையாலும் திரு நடனத்தாலுமே உலகம் நடக்கிறது. அதை அறிவிக்கவே இசையும் நடனமும் ஏற்பட்டன. இரண்டும் தெய்விகக் கலைகள். அவற்றைத் தூய நிலையிற் போற்றும் கலைமணிகாள்! கலைத்திறமையுடன் மனங் கவரும் பொன்னழகும், மின்னகையும் உங்களுக்குள்ளன.

மேன : எல்லாம் பிரமன் அருளிய வரமே. இறைவா! எமது அழகு விலைக்கு விற்கும் அழகன்று. தாசிகளென்றால் விலைமாதரென்று உலகில் பழிக்கின்றனர். அப்

பழி நீங்க வேண்டும். தேவர் சேவைக்கே நாங்கள் தோன்றினேம். கலையினால் கடவுளன்பை வளர்ப்பதே எங்கள் வேலை. முனிவர், தவசிகள் என்று தவவேடம் புனைந்தோரின் உறுதியைச் சோதிப்பதும் எங்கள் வேலை.

இந் : அதற்கே அழைத்தேன். ஊர்வசி! கைலையங்கிரியில் வீரவிஜயன் சிவனை நோக்கிக் கடுந்தவம் புரிகிறான். அவனை உங்கள் அழகிற்கு அடிமையாக்க வேண்டும். அன்று சுபத்திரைக்கும், அல்லிக்கும் வசப்பட்டவன், உங்கள் மோகன வலைக்கு தப்புவானா? மன்மதனும் துணைக்கு வருவான்.

அரம் : இறைவா! "சிவன்" என்றால் காமன் சிதைந்தோடுவான்; கைலை என்றால் எங்கள் கலைச்சமர்த்து கலங்குமே. கைலைமலையில், சிவனை நோக்கிக் கடுந்தவம் புரியும் வீரனை, அழகும் கலையும் வசப்படுத்துமா? இருப்பினும் இறைவனாணைப்படி செய்து பார்க்கிறோம்.

இந் : நானும் வருவேன். முன்னே சென்று சிவன் கணைக்காகச் செய்யும் தவத்தின் மீது விழிக்கண்களைப் பாய்ச்சுங்கள்! தூதுப்பாட்டுப் பாடியாடிச் செல்லுங்கள்.

**அரம்பை, மேனகை :**

உண்ணா, உறங்க, வுடுக்க மறந்தேன் ;
ஊர்ப்பழி யச்சமும் ஒக்கத் துறந்தேன் ;
கண்ணுங் கருத்துங் கலங்கவோர் மாலை
கள்ளன்வந் தென்னுள்ளங் கொள்ளைகொண் டான்டி.

(தூது கொண்டு)

[நடனமிட்டுச் செல்லல்]

இந் : குருவே ! யானும் கைலை சென்று அந்த வில்லன் தவவுறுதியைக் காண்கிறேன் !

[செல்லல்]

## காட்சி ௩. தனஞ்ஜயன் தவவுறுதி

[விஜயன் சிவக்கோலத்துடன் அசையாது தவத்தில் வீற்றிருக்கிறான்.]

விஜயன் :

என்புநெக் குருகச் சங்கரா வென்றுன்
இணையடிக் குளமலர் சூட்டி,
அன்புசெய் அடியார்க் கன்பனே, அறிஞர்
நண்பனே, அருந்தவக் கனலே !
உன்பா மெல்லாம் என்னையா ளுடையாய் !
உலகமும் வானமும் விரும்பும்
இன்பமே, ஊறும் அமுதமே, முன்வந்
தெளியனேற் கருள்புரி சிவமே !

சிவோஹம் ! சிவோஹம் ! சிவோஹம் !

[நிட்டையிலிருத்தல். மேனகை, அரம்பை இருவரும் வந்து நடனமாடுகின்றனர்.]

தண்டையணி கிண்கிணி
சஞ்சலந் சலவென
தந்திமித் தகவென—நடமாடும்
கொண்டலணி கொண்டையுங்
கொங்கையணி கோதையும்
கொம்மையிளந் தோகையின்—கனிவாயும்

**மேனகை:** அடி அரம்பா! நமது முல்லைச் சிரிப்பு வெறும் வனாந்திரத்தில் வாடுதடீ!

**அரம்பை:** மேனகா! இவ்வெள்ளி மலையில், இச்சந்தன வசந்தத்தில், தன்னந் தனிமையில், தேவர்கள் உள்ளமும் கடல் மீன்போலப் பிடிபடும் நமது அழகின் வலையில், இந்த வீரன் விழிகள் சிக்காமை அதிசயம்! நமது கிண்கிணிக் கூத்து இவ்வழகன் மனதில் எவ்விதமான ஆசையலைகளையும் வீசவில்லையே! இது காமாரி வாழும் கைலையின் திறமா? அல்லது சிவ யோகத்தின் பெருமையா?

**மேன:** கிட்ட நெருங்கிப் பார்ப்போம். வேளினும் அழகா! வீர வில்லியே! எம்மைக் கண்விழித்துப் பாராயோ! அரசே, அன்பே, இன்பே! எமது தாகந் தீராயோ!

[இவர்கள் சொல்வதை
எதிரொலி திருப்பிப் பேசுகிறது]

**அர:** எதிரொலிதான் உனக்கு விடையளிக்கிறது. இன்னொரு ஆட்டம் பிடிப்போம்.

கள்களணி விந்தையும்,
கன்னிதுயிற் செந்சோலும்,
மீன்களணி மாலும்—கணைவேளும்

**அர:** என்ன தவமடீ! என் அழகைப் பாரானோ!

**எதிரொலி:** அழகைப் பாரானோ!

**மேன:** என்னைப் பார்—என்னழகை!

**எதி:** என்னைப் பார்—என்னழகை!

**மேன:** என் கண்ணைப் பார்!

எதி: என்...........பார்.

அர: மாதர்விழி பேசும் மதனவேதம் செல்லாது!

எதி: மாதர்விழி....செல்லாது.

அர: என்னைக் கேள்—என்னிசையை.

எதி: என்னைக் கேள்...............

மேன: நின்மீது மையலானேன்.

எதி: நின்மீது...............

அர: நாகந்திராய்!

எதி: நாக...............

மேன: ஒரு கட்டி முத்தம்!

எதி: ஒரு...................

அர: உன் முயற்சி பலியாது.

எதி: உன் மு...................

மேன: கௌசிகனும் எனக்கிணங்கினன்.

எதி: எனக்கிணங்கினன்.

மேன: ரம்பா நீ தோற்றாய்!

எதி: நீ தோற்றாய்!

அர: நீயும் தோற்றாயே!

எதி: நீயும்...........

மேன: ஏதடி! இந்த எதிரொலி நம்மை ஏளனம் செய்கிறது!

எதி: எதடி............செய்கிறது!

அர: மன்மதா! உன் மலரம்பைப் பொழி பார்ப்போம்!

[மலர்களைப் பறித்து மேலே எறிதல்]

எதி: மன்மதா................

மேன: மன்மதா உனக்கும் பெப்பேதான்!

எதி: மன்மதா............தான்!

அர: சரி இங்குப் பலியாது. அதெல்லாம் பழங்கதை.

எதி: சரி....கதை.

மேன: கிட்ட நெருங்கமுடியவில்லையே தவக்கனல்!

மண்டல முழுவதும்
மன்னுசிவ சக்தியைக்
கண்டவர் கலங்கிடார்—பகவானே

(தண்டையணி)

[அடி நெருங்கித் தோற்றுத் திகைக்கிறான்]

அர: ஊஹூம் பலியாது!

எதி: ஊஹூம் பலியாது!

மேன: இந்திரன் செல்வமே!

எதி: இந்திரன்............

அர: உனக்கு இவ்வேடமேன்?

எதி: உனக்கு....

மேன: சீ, சீ! எதிரொலியே!....

எதி : ஓ, ஓ! எதி....

அர : முன்னே செல்!

எதி : முன்னே....

மேன : தவம் வென்றது ; அழகின் மாயம் தோற்றது!

எதி : தவம்....

அர : ஆத்ம தீரன் வென்ருன்!

எதி : ஆத்ம....

[செல்கின்றனர்]

### காட்சி ௪. இந்திரக் கிழவன்

[விஜயன் தவவுறுதியி லிருத்தல்]

விஜயன் :

வேண்டினர் வேட்கை தீர்க்கும் வேந்தனே, விரும்பிப் பாதந்
தீண்டினேர்க் கபயமீயுந் தெய்வமே, அருட் கண்ணுலே
காண்டவர்க் கறிவா மின்பக் கனலனே! கால காலா!
ஆண்டனேக் குறுதி தாராய் ஹரஹர சிவனே போற்றி!

சிவோஹம்! சிவோஹம்! சிவோஹம்!

[தியானத்தில் இருக்கிறுன். கிழ
முனிவனெருவன் வருகிருன்.]

கிழ முனிவன் : என்ன தவவுறுதி! தவக்கனல் கொழுந் தேறுகிறதே! காண்டீவத்தால் பகைவரை நடுநடுக்கும் என் வீரச்சிங்கம் தவவுறுதியால் பெண் மாயத்தை வெட்கியோடச் செய்தானே, என்னவுறுதி! என்ன

வுறுதி! இவனை நாமொருமுறை சோதித்துப் பிறகு ஆசி கூறுவோம்.

[விஜயனை யணுகி]

வீர வாலிபனே!

விஜ : (மௌனம்)

கிழ : அகோ வாலிபனே! இங்கென்ன செய்கிறாய்?

[தடியைத்தட்டி]

எதிரொலி : இங்கென்ன செய்கிறாய்?

கிழ : சிவக்கோலம் பூண்ட சிறுவா!

[அணுகித் தட்டியெழுப்பி]

கண்விழித்துப் பாராய்!

விஜ : சிவோஹம்! சிவோஹம்!

கிழ : நீ யார்!

விஜ : சிவோஹம்! சிவோஹம்!

கிழ : உன் ஊர்!

விஜ : சிவோஹம்....சிவோஹம்!

கிழ : அதிருக்கட்டும். சாதாரணமாக உலக வழக்கத்தில் பேசுவோம். உன் பெயர்?

விஜ : சிவோஹம், சிவோஹம்!

கிழ : நீ அரசன்; வீரன். இக்கோலம் பூண்டதேன்?

விஜ : ஆ...

கிழ : கொஞ்சம் கேளப்பா. எனிந்த வயதில் இப்படிச் சாமியாரானுய்? குடும்பம் உண்டா? பிள்ளைகளுண்டா?

விஜ : ....சிவோஹம்.

கிழ : மறுபடியும் சொக்கி விழுகிருயே—நினைப்போடு பதில் சொல்லு! இங்கு நீ இப்படியிருப்பதன் காரணம்? வீட்டுக்காரியிடம் கோவித்துக்கொண்டு வந்துவிட்டாயா? அல்லது குடும்பத்தைத் தாங்க முடியாமல் இப்படிப் போலித்துறவு பூண்டாயா?

விஜ : சிவம், சிவம், சிவம்!

கிழ : என்ன செய்கிருய் இங்கு?

விஜ : தவம், தவம், தவம்.

கிழ : எதற்காக?

விஜ : சிவம், சிவம், சிவம்!

கிழ : ஓகோ! நீர் சிவத்தை அடையப் போகிறீரோ?

விஜ : சிவம், சிவம், சிவம்!

கிழ : எப்படிச் சிவனையடையப் போகிறீர்?

விஜ : ஓம் சிவாயநம : ஓம் சிவாயநம!

கிழ : போங்காணும் போம். அண்டமாமுனிவரெல்லாம் ஆனமட்டும் முயன்றனர். மூச்சைப் பிடித்தனர், வாசியடக்கினர், மூலக்கனலில் மூழ்கினர்; மந்திர ஜபம் செய்தனர், ஆத்ம விசாரம் செய்தனர்; அணுக முடியவில்லை. அத்தகைய தேவதேவனை, மஹா

தேவனை, சதாசிவனை இவர் பார்க்கப் போகிறாராம்! வேதங்கள் தேடுகின்றன ; அறிவு தேடுகின்றது........ காணவில்லை. நீர் எதைக்கொண்டு காண்பீர் ?

விரு : அருள், அருள், அருள். ஓம் நம : சிவாய !

கிழ : சிவம் சிவம் என்றால் என்ன தெரிந்து கொண்டீர் ? விவரமாகச் சொல்லும் !

விரு :

"தானாகித் தானல்ல தோன்றுமில்லாத்
தன்மயனா யெவ்வேவைக்குந் தலைவனாகி
வானாகி வளியனலாய் நீருமாகி
மலர்தலைய வுலகாகி மற்றுமாகி
தேனாகித் தேனினறுஞ் சுவையதாகித்
தீஞ்சுவையின் பயனாகித் தேடுகின்ற
நானாகி யென்னிறையாய் நின்றேய் நின்னை
நாயடியே னெவ்வாறு நவிற்றுமாறே!"

ஓம் நம : சிவாய ! நம : சிவாய ! சிவமே போற்றி ! சுகமே போற்றி !

கிழ : ஐயா இருக்கட்டும்; ஒரு முயற்சியுமில்லாமல் சும்மா இருக்கிறீரே! அன்று சிவனைக் காண ஒருவர் ஆகாசத்தில் பறந்தாராம், மற்றொருவர் பூமியைக் கிண்டினாராம். புராணம் சொல்லுகிறதே. சிலர் சிதம்பரத்தில் கூத்தாடுகிறானென்று திருவிழாப் பார்க்கப் போகின்றனர். சிலர் பாடுவர், ஆடுவர், கண்ணீர் வடிப்பர், உருளுவர், புரளுவர். "பொது நடம்புரியும் புண்ணியா!" என்பர். நீர் போற்றும் பொருளின் தன்மையென்ன ? சொல்லும், சும்மா இருக்கிறீரே !

விஜ :

“ போது வென்றுய் போதுவினடம் புரியாநின்ற
பூரணசிற் சிவமென்றும் போதானந்த
மதுவென்றும், பிரமமென்றும், பரம மென்றும்
வருக்கின்றோர் வருந்திடுக ; அருதா வென்றும்
இருவென்றுஞ் சுட்டவொணு ததனுற் சும்மா
இருப்பதுவே துணிவெனக் கொண்டிருக்கின் றேனை,
† விதுவென்ற தண்ணளியாற் கலந்து கொண்டு
விளங்குகின்ற பெருவெளியே விமலத் தேவே !

கிழ : நீரும் சும்மா இருக்கும் வேதாந்தம் பேசத்தொடங்கி விட்டீரா ! ஏதோ வெளி, ஒளி என்று கழித்துக் கட்டுகிறீரே ; சொல்வதைக் கேளும் ! சிவம் காணரிய பொருள். குணங்குறியற்றது. அதைக் காண முயலாதேயும்! அது ஒன்று. வாய் மனத்திற் கெட்டுவதன்று. மதங்களெல்லாம் அதைக் காணுது வாயடங்கின.

விஜ :

“ வாயாகி வாயிறந்த மௌனமாகி
மதமாகி மதங்கடந்த வாய்மையாகிக்
காயாகிப் பழமாகித் தருவாய் மற்றைக்
கருவிகா ணுதிகளின் கலப்பாய்ப் பெற்ற
தாயாகித் தந்தையுமாய்ப் பிள்ளையாகித்
தானுகி நானுகிச் சகலமாகி
ஓயாத சக்தியெலா முடைய தாகி
யொன்றகிப் பலவாகி யோங்குந்தேவே!

ஓம் சிவாய : நம : ! சிவோஹம் ! சிவமயம். சிவம் ஒன்று ! எல்லாம் சிவம்.

---

† சந்திரன்

**கிழ :** உமது ஞானமெல்லாம் சரி. அதைப்பார்க்க ஒரே பிடிவாதமாய் உட்கார்ந்திருக்கிறீரே-உமது சமர்த்துப் பலிக்குமா!

**விஜ :** சிவோஹம்! சிவோஹம்!

ஆவன செய்வாய் நீயே;
அப்பனே; அரனே; அன்பர்
வாவென வருவாய்; வேண்டும்
வரங்களை விரும்பி யீவாய்;
சாவையும் எதிர்த்து நிற்பேன்;
தரிசனந் தந்தா லன்றிப்
போவது புரியேன் இன்பப்
போதுநடத் தரசே போற்றி!

**கிழ :** தோற்றேன் தோற்றேன். இனி என் சோதனை பலியாது. வைரத் தூணை மரவாள் அறுக்குமா? [இந்திரனாக முன்னின்று] வீர விஜயா! வெற்றி விஜயா!

**விஜ :** ஆ தந்தையே! தாங்களா இப்படி வந்து சோதனை செய்தீர்? ஏதேனும் வணக்கக் குறைவாகப் பேசியிருந்தால் மன்னிக்க வேண்டும்.

**இந்திரன் :** வீர மகனே! யானே வுன்னை அப்படிக் கேட்க வேண்டும். விஜயா! உன் தவம் சித்தி பெறும். பரம சிவன் அருள் புரிவான். நீ கருதும் சிவாஸ்திரம் கிடைக்கும். சிவன் உன் முன் தோன்றுவான். அவன் விளையாடல்கள் பல. அதனால் அவனை அருளாலறிந்து பணிந்து வரங் கேள்!

**விஜ :** தந்தை திருவுளப்படியே.

இந் : என் செல்வனே, நீ சிவாஸ்திரம் பெற்று உலகை யழிக்கும் அரக்கரை யழித்து, அறவோரைக் காப்பாயாக! எனது இந்திரலோகத்திலும் உனக்கு வேலை யுள்ளது. வந்து உன்னை அழைத்துச் செல்கிறேன். நீ நீடூழிவாழ்க!

[ஆசிர்வதித்துச் செல்கிருன்]

விஜ : சிவோஹம்! சிவோஹம்! இன்பத்தேவே! கருணைத் தேவே! உன்னருளிச்சைப்படி எல்லாம் நடக்கட்டும்!

மோனமாம் கைலைமீது, முத்தியாம் சுனையிற் பொங்கி,
ஞானமாம் கங்கை யாகி, நான்அது ஓம்ஓம் என்று
கானமாய்ப் பெருகித் தாய்போற் கருணையால் உயிர்கட் கின்பத்
தேனமு தளித்துஞ் சுத்த சிவானந்த நிறைவே போற்றி!

சிவோஹம்! சிவோஹம்!

[தவத்தமர்கிருன்]

மூன்றும் அங்கம் முற்றிற்று.

——

# நான்காம் அங்கம்

## காட்சி க. மூகாசுரன்

[துரியோதனன் விசனமும் பொறுமையும் கொண்டு மூகாசுரனை எதிர்பார்த்திருக்கிறான். சகுனி அவனைத் தேற்றுகிறான்.]

**துரியோதனன் :** ஐயோ....ஹோ....ஹோ....ஹோ....

**சகுனி :** ஏனடா யோக்கியா....அழாதே!

[கண்ணைத் துடைக்கிறான்]

**துரி :** மாமா....ஹ்....ஹ்....ஹ்....

**சகு :** வேண்டாமடா........துரையே!....நீ ராஜா....பாம்புக் கொடிச் சிங்கம்....நான் உன் மந்திரி....ஏன் அழுகிறாய்?...

**துரி :** மாமா....வாயிலே விழுந்ததடா, வறுத்த மண்!

**சகு :** யார் உன் வாயிலே மண்போட முடியும்? என்னிடம் சொல்....ஒரு கை பார்க்கிறேன்.

**துரி :** இந்த வியாசத் தாத்தா....மோசம் பண்ணினாரடா....? என் ஆத்திரத்திலே பாட்டை விட்டு அணைத்தார். இதேதடா அபசகுனம் என்று சேனையைத் திருப்பிக் கொண்டுவந்தேன். அந்தப்புறம் தருமப் பூச்சிகளிடம் போய் என்னவோ மந்திரமாம் உபதேசம் பண்ணி, அந்த வில்லனைத் தவம்பண்ண அனுப்பி விட்டார்.

சகு : ஆமாம் இவனுக்கும் எனக்கும் உனக்கும் தவம் வேறு! இதெல்லாம் வீண்புரளி. ஆற்றுமணலை எண்ணினாலும் அருச்சுனன் பெண்சாதிகளை எண்ண முடியாது என்று கேட்டதில்லையா? அவன் காதல் நாடகங்களை நான் புராணம் புராணமாகச் சொல்லு வேனே. தவமா....தனஞ்ஜயனுக்குத் தவமா!....ஆ ....ஆ....சரி, சரி, சரி....

துரி : இல்லை மாமா....பண்ணுகிறான்; நன்றாய்ப் பண்ணு கிறான். ஒற்றைக்காலில் நின்று பண்ணுகிறான். காற்றை உண்ணுகிறான். தேவர்களெல்லாம் 'இப்படித் தவம் கண்டதில்லை' என்கிறார்களாம். சிவன் அவனுக்கு அம்பு தரப்போகிறான். மாமா.... ஹ....ஹ்....கெட்டதடா காரியம்....

சகு : வரட்டுமே அம்பும் ஆளும்....பார்ப்போம்.

துரி : அப்படிச் சொல்லாதே மாமா. தவத்துடன் அவனை அபக் என்று விழுங்கிப் போடவேண்டும். திரும்பி வந்தால் என்குடி கெட்டுப்போகும்.

சகு : சரி....அதற்கு என்ன யோசனை செய்திருக்கிறாய்?

துரி : நமது மூகாசுரனைப் பிடித்திருக்கிறேன்.

சகு : சரியான பேர்வழி! உடம்பெல்லாம் வயிறு....வாயெல் லாம் தீனி....எதைப் போட்டாலும், எவ்வளவு போட் டாலும் வஞ்சனையில்லாமல் உள்ளே தள்ளி உறங்கு வான்.

துரி : அவனைத்தான் எதிர்பார்த்திருக்கிறேன். ஆ! வரு கிறான்!

[மூகாசுரன் வருகிறான். மொச்சு மொச்சென்று பன்றி மாதிரி வாயைச்சப்பிக் கீச்சுக்குரலிற் பேசுகிறான்.]

மூகாசுரன்: ஹேவ், ஹேவ். ம்ச், ம்ச், ம்ச்—சாப்பாடு—ஏற்வ்—ஹேவ்! வாழ்க!.......ஹேவ்...நாளைக்கு மூன்று வேலை—ஹேவ்.......ம்ச், ம்ச்,—கிடங்கிலே சரக்கு தள்ளவேண்டியது.......காடியுறக்கம் போடவேண்டியது.......க்ர்ரூ க்ர்ரூ (குறட்டைவிடல்) இப்போதே தூக்கம் தள்ளுகிறது—மூன்றாவது வேலை துரியோதன மஹாராஜா சொல்வார்.

துரி: வா மூகா! மூக்கைப் பிடிக்க நன்றாகச் சாப்பிட்டாயா? வந்தபோது களைத்திருந்தாய்.

மூகா: ஆஹா, அ....ஹாவ்வ்! குழி நிரம்பிவிட்டது.

துரி: அடுத்தது என்ன வேலை தெரியுமா?

மூகா: அடுத்தவேலை இதோ வந்துகொண்டிருக்கிறது. கண்ணைச் சுழற்றித் தள்ளுகிறது. க்ர்ரூ! க்ர்ரூ!

மாமா: என்ன நின்றுகொண்டே குறட்டை விடுகிறாய்!

மூகா: அப்படிப் பழக்கியிருக்கிறேன் இந்த உடலை. ஓடிக்கொண்டுகூட உறங்குவேன்.

துரி: சரி, சற்று உறங்கு! பிறகு?

மூகா: உடனே ம்ச், ம்ச்—ஏற்றுமதி.

துரி: அட! நான் சொன்ன காரியம்?

மூகா: ஆ மறந்துபோனேன்—என்னது?

மாமா: உனக்கு மூளை எங்கே.......?

மூகா: வயிற்றிலே! சாக்கில் சரக்கேறி யிருப்பதால் அதற் கடியில் மூளையிருக்கிறது. என்ன சொன்னீர் ஹாவ்! க்ர்ரூ. [தூங்கி விழுகிறான்]

துரி: மூகா! தூங்காமல் கேள், அர்ஜுனன், கைலே யில்—தவம்புரிகிறான்—அங்கே போய்........பன்றி மாதிரி........

மூகா: இருங்கோ..................அர்ஜுனன்—கைலேயில்—தவம்—பன்றி மாதிரி—என் ஜாதித் தொழில் எனக்குத் தெரியும்—அங்கே போனால் வயிற்றுக்கு முதலில் ........ஏற்பாடாகவேணுமே!

துரி: கந்தமூல பலாதிகள் உள்ளன.

மூகா: அந்தப்பேச்சு........எனக்கு முடியாதே. நான் கிடைத்ததெல்லாம் கிடங்கிலே தள்ளும் பேர்வழி.

துரி: மூகா உனக்குச் சரியான உணவுதான் காட்டி னேன். இங்கு ஒரு தூக்கம்போடு! மீண்டும் வேண்டுமட்டும் ஏற்றுமதி செய்துகொண்டு, மலே யேறுவதற்குள் சரியான பசியாயிருக்கும்—உடனே கண்ணைமூடி "சிவசிவா" என்றிருக்கும் அந்த ஆளே நற நற வென்று கடித்து விழுங்கி வா....!

மூகா: ஒரே அள்ளு—உள்ளே தள்ளு..................இதுவே நமது கொள்கை.

துரி: புறப்படு!

மூகா: இதோ க்ர்ரூ, க்ர்ரூ, ஒரு உறக்கம், ஏற்றுமதி பயணம். அங்கே போனதும் ம்ச், ம்ச், ம்ச்—அவனே ஒரே அவக்! [போகிறான்]

சகு : இனி அச்சமில்லை, ஐயமில்லை.

துரி : இரண்டும் என்னை விட்டபாடில்லை—பீமனைக் கண்டால் அச்சம்—விஜயனை எண்ணினால் ஐயம்........

சகு : பயப்படாதே சுயோதனா! மூகன் பார்த்ததை பக்ஷணம் செய்து விடுவான்.

துரி : சிவாஸ்திரத்திற்குக் குறுக்கே பன்றியோட்டியிருக்கிறேன்—எப்படியாகிறதோ பார்ப்போம். இத்தனைமுயற்சிகளுக்கும் இந்தத் தர்மப் புழுக்கள் எப்படித் தப்புகின்றன? யார் தப்புவிக்கின்றனர்? அவர்கள் உயிருக்குவைத்த உலையில் என் மனமே விழுந்து கொதிக்கிறது. நான் செய்யும் கருவினை அவர்களுக்குத் திருவினையாக முடிகிறதே....மூகனாவது அந்தக் கரியனை விழுங்கவேண்டும். மூகன் அவனைச் சிரணித்து வந்தால் "பக்கா குண்டோதரப் பன்றி" என்ற பட்டமும், நமது ராணுவத்தில் ஆள்விழுங்கி வேலையும், ஒரு தீனிக்கிடங்கும் தருகிறேன்.

சகு : மூகன் மோப்பம்பிடிக்கும் ஆள் தப்பமாட்டான். வா, இனி நாம் சந்தோஷமா யிருப்போம் !

துரி : இந்தப் பயல்கள் இருக்குமட்டும் எனக்கு வயிற்றெரிச்சலுக்குமேல் வயிற்றெரிச்சல் கிளம்புதடா.... மாமா....ஹ்ஹ !

[இருவரும் செல்லல்]

---

## காட்சி உ. சக்திசிவன் கருணை

[கைலை. சிவனும், சக்தியும் தவப்பீடத்தில் வீற்றிருத்தல். முனிவர் விஜயன் தவநிலையைச் சொல்லல்.]

முனிவர் :

உலகெலாம் உனது கோயில்; உயிர்க்குலம் உனது மேனி;
பலபல தோற்ற மெல்லாம் பரமநின் அருளின் பன்மை;
இலகுமெய் அடியார் உள்ளம் இறைவநீ ஆடும் தில்லை,
நலமுயர் பரம சக்தி நாதனே போற்றி, போற்றி!

[எல்லாரும் வணங்கல்]

ஓம் நமசிவாய!

சிவன் :—முனிவர் முத்தியின்ப மெய்துக!

முதல் முனிவர் :—பரம, பார்வதி பாக, சதாசிவ! சந்நிதானத்தில் ஒரு விண்ணப்பம்.

சிவன் :—அன்பர் வேண்டுவ தென்ன?

முதல் முனிவர் :—பரம்பொருளே! வீர விஜயன் இங்கே கடுந்தவம் செய்கிறான். அவனது தவக்கனல் கொழுந்தேறிப் பரவுகிறது. அன்பன் விருப்பத்தை அருள வேண்டும்!

சிவன் :—நல்லது, அறிவோம்; இதோ எழுந்தோம்! நீங்கள் தவாசிரமங்களுக்குச் செல்லுங்கள்!

முனிவர் :

ஆய்வுறுங் கலைகள் எல்லாம் அருக்கன்முன் மீன்க ளென்னத்
தேய்வுறச் சுடரும் ஞானச் செங்கதிர்ப் பிழம்பே, எங்கள்
வாய்மனங் கடந்த மோன வாவமே, தொழில்க ளைந்தும்
தோய்வறப் புரியும் சுத்த சோதியே போற்றி, போற்றி!

[வணங்கல்]

**முதல் முனிவர்** :—நமப் பார்வதி பதயே!

**எல்லாரும்** :—ஹர ஹர, மஹாதேவா!

சிவசிவ சுத்த சுயஞ்ஜோதி
ஜயஜய தேவ பரஞ்ஜோதி!

[நாமாவளி பாடி நடனமாடிச் செல்லல்]

**சிவன்** :—பார்வதி, அடியார் காட்சி ஆனந்தம்!

**பார்வதி** :—பக்தர் சங்கம் பரமானந்தம்! இறைவ, வீர விஜயன் எவ்வாறு இத்தகைய தவசித்தி பெற்ருன்?

**சிவன்** :—சக்தியே, 'சிவம்' என்ருல் தவம் தானே வரும். 'நம சிவாய' என்னும் பஞ்சாக்ஷரியை எவன் சித்த வைராக்கியத்துடன் தினம் பதினுயிரம் தடவை ஜபிக்கிருனே அவன் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய படிகளையெல்லாம் எட்டினவனுகிருன்.

**பார்வதி** :—பரமா, பஞ்சாக்ஷரி ஜபத்திற்கு நியமம் என்ன?

**சிவன்** : பஞ்சாக்ஷரி ஜபம் செய்யும் பக்தன், உள்ளும் புறமும் சுத்தமாயிருக்கவேண்டும்; மனத்தில் உண்மை, வாக்கில் வாய்மை, செய்கையில் மெய்ம்மை கொண்டு, எங்கும் சிவமயம் கண்டு எல்லா உயிர்களுக்கும் அன்பாயிருக்கவேண்டும்; எவ்வுயிரும் பராபரன் சந்நிதி என்று நினைக்கவேண்டும்; சைவ உணவே பசி கண்டு அருந்தவேண்டும்; விருப்பு வெறுப்பற்ற சமநிலை மனத்தனு யிருக்கவேண்டும்; காமம் வெகுளி மயக்கங்களை அடக்கியாளவேண்டும்; என்னைச் சச்சிதானந்த மயமாகக் கருதி, உலகெலாம் என் கோயிலாகவும், உள்ளமே சந்நிதியாகவும், அதில்

உள்ள பொருளே நானாகவும் பாவித்து, 'நமசிவாய' என்று மௌனமாக மனங்குவிந்து ஜபம் செய்ய வேண்டும்!

**பார்வதி :** அவ்வாறு ஜபம் செய்து முன்னே மார்க்கண்டேயன் நித்தியமுக்தி பெற்றான். இதோ, விஜயன் அருள் வேண்டுகிறான்! இறைவ, எழுந்திருங்கள்.... அன்பனை ஆண்டுகொள்ள!

**சிவன் :** [தியானத்தில் அமர்ந்து] புறப்படு, பார்வதி!....அன்பனை விழுங்க மூகாசுரன் வருகிறான்...பார்வதீ, உடனே இருவரும் வேடுவர் வேடம் கொண்டு செல்வோம்! பூதகணங்கள் வேடுவராக வில்லேந்தி வருக!....

**பார்வதி :** இறைவ, இதோ தயார்!

[இருவரும் மறைதல்]

## காட்சி ௬. பன்றி வருகிறது

[மூகாசுரன் பன்றியுருக்கொண்டு உறுமி வருதல்]

**மூகாசுரன் :** இதோ வந்தேன். மொச் மொச் மச் மொச்! நல்ல சாப்பாடு வருது! ஒரே அவக் அவக்! அவக் உகுர் உகுர் உகுர்!

[ஓடுகிறான்]

நான்காம் அங்கம் முற்றிற்று.

---

# ஐந்தாம் அங்கம்

## காட்சி க. சிவசக்தி வேடர்

[விஜயன் ஆழ்ந்த ஜபத் தியானத்தி லிருக்கிறான்]

**விஜயன் :** இயற்கையில் புத்தொளி ; இதயத்தில் புதிய இன்பம் ; எங்கும் சிவமயம், சிவப்பொலிவு ! என் அப்பன் இன்று வருவானோ ? அன்பர்க் கன்பன், அடியார் நேயன் இன்றெனை ஆட்கொள்வானோ ? இறைவ, எதிர்பார்த்திருக்கிறேன் ; உன் திருவுளம் நடக்கட்டும் !

எய்துவாய் ஓர்நாள் என்றுனை நம்பி
  இருக்கிறேன் இதயத்தில் ஊன்றி ;
செய்தவ மெல்லாம் செய்தனை என்னுள் ;
  ' சிவ ' வெனச் சிந்தனை செய்தேன்.
கைலையின் பரமா, தனிப் பெருங் கருணைக்
  கடவுளே அடியவர் கதியே !
வையக மெல்லாம் வாழ்கநின் பெருமை
  வளர்பர மானந்தச் சுடரே !

சிவோஹம் ! சிவோஹம் !

[ஜபத்தில் ஆழ்கிறான்.
மூகாசுரன் வருகிறான்]

**மூகா :** அவக்-அவக்-அவக், ம்ச்-ம்ச்-ம்ச், க்ரூ—இது நமது மந்திரம். இந்த மந்திரம் உச்சரித்தவுடன் எதிரேயிருப்பது உள்ளே போய்விடவேண்டும். ம்ச் - ம்ச்

- ம்ச் - சரியான ஆள்! மினுமினுக்கிருன். ஒரு வேளைக்குப் போதும்—ம்ச் ம்ச் - உர் உர்-ட் - ட் - உர்.

விஜ: சிவமயம்! சிவமயம்!

மூகா: அவக் - அவக் - அவக் - ஒரே அவக்!

[வாயைத் திறந்துகொண்டு கிட்ட நெருங்குகிருன்]

விஜ: சூ, போ! - ஹூம் - இக்காட்டுப்பன்றி விநோதமா யிருக்கிறதே! தவத்தைக் கலைக்கும்போ லிருக் கிறதே!

மூகா: அவக் - அவக் - க்ரூ!

[கடிக்கப்போகிறது]

விஜ: இது அசுரப்பன்றி! இப் பிறப்பொழிந்து இதற்கு நல்ல பிறப்பு வரட்டும்! பன்றியே!

மூகா: அவக் அவக் - ஹேவ்!

விஜ: ஆ! நம்மையன்ருே தின்ன வருகிறது. பாசுப தாஸ்திரத்திற்கும், ப்ாரதத்திற்கும் இடையே இப்பன் றியை யோட்டிவிட்டது யார்? அறிந்தேன். துஷ்டா, நீ பட்டாய்!

[தான் அம்பு விடு முன்பே பின்னே யிருந்து ஒரு கணை பன்றிமேல் தைக்கிறது. விஜ யன் கணை பிறகு தைத்துப் பன்றி உடலை ஊடுருவிச் செல்லுகிறது.]

மூகா: ஹீ - ஹீ - ஹீ - செத்தேன்! செத்தேன் - ஐயோ திரும்பிப் போய்ச் சாப்பிட வேண்டுமென்று இருந்

தேனே - இவனைச் சாப்பிட வேண்டுமென்றிருந் தேனே - இன்னும் எத்தனையோ பேரைச் சாப்பிட வேண்டுமென்றிருந்தேனே! என்னுயிரை இரண்டு கணைகள் சாப்பிட்டுவிட்டனவே! நான் எவ்வளவோ சாப்பிட்டு வளர்த்த வயிற்றை மண்சாப்பிடப் போகிறதே! ஹிஹி ஹிஹி ஹிஹி, துரியோதனா! உன்னிடம் விருந்து சாப்பிடுவதற்கு மறு பிறப்பெடுத்து வந்து விடுகிறேன்........

[இறக்கின்றான். சிவன் வேடுவனாகி வேங்கையுரியுடுத்துக் கையில் வில்லும் கணையும், தோளில் தூணியும் ஏந்தி முன் வருகிறான். பார்வதி வேடச்சி வேடந் தாங்கி, தலையில் பூச்செருகி புலிப்பல் மாலை வேய்ந்து, பின்னே வருதல்.]

**வேடன்:** யார் நீர்?

**விஜ:** (மனத்துள்) யாரிவ் வேடர்கோன்? வேடன் வேஷனாகத் தோன்றுகின்றானே! கண்ணில் அறிவொளி காந்துகின்றதே! இருப்பினும் கேள்விக்கு விடையளிப்பது கடமை....சிவமயம்! வேடர்கோனே யான் சிவ பக்தன்.

**வேட:** ஆ, இப்படிச் செய்யலாமா? அடியார் கொடியாராகலாமா? நான் முகம் பிளக்க அம்புவிட்ட பன்றியை நீர் பின்னே ஊடுருவிச் சிரம்பிளக்கப் பாணம்விட்டு எப்படிக் கொல்லலாம்? என் இலக்கை நீரெப்படி எய்தீர்? வேட்டையில் பங்கு போடவா? அது முடியாது. வாரும் உமக்கும் எமக்கும் வழக்கிருக்கிறது.

விஜ : ஐயா இத்துட்டப் பன்றி, என் சிவத்யானத்திற்கு இடையூறு செய்தது ; என்னை விழுங்கவந்த இக் கொடிய அரக்கப் பன்றியை வீழ்த்தாவிடின், எனக் குக் கையுங் கணையு மிருந்தும் பயனென்ன? தவத் திற்கும், அறத்திற்கும், மன்னுயிர் நலத்திற்கும், இடர் செய்யும் அரக்க விலங்குகளை நசுக்கி யெறி வதே வீரன் கடமை. வீரர் கடமையை யான் செய் தேன் ; வேடர் கடமையை நீர் செய்தீர்.

வேட : (மூக்கில் விரல் போட்டு) அடேயப்பா, சாமி யென்ருல் கண்ணை மூடிக்கொண்டு 'சிவ சிவ' என்று சாதுவாக ஒரு மூலையில் அசையாமல் கட்டை மாதிரி உட்காரவேண்டும். நீ வேடன் - சாமியல்ல!

விஜ : நீரே வேடன் (வேஷன்)!

வேட : தவசிக்கழகு தண்ணருள். தன்னுயிர் வேறு மன்னுயிர் வேரு? கொல்லா நெறியே தவம். நீ என்ன தவசி! என்ன சாமி! வேடன் செய்ததை விரதி செய்வதா? விரதனு? கிராதனு?

விஜ : வேடா, யான் வீரன் ; ஒரு வீர வெற்றிக் காகத் தவம் புரிகின்றேன். பயிரை யழிக்கும் களை களிடமும், பசுமரத்திற் பாய்ந்த புல்லுருவிகளிடமும், உயிரை யழிக்கும் விலங்குகளிடமும், அறத்தை யழிக் கும் அரக்கரிடமும், தவத்தைக் கெடுக்கும் தானவரிட மும், குலத்தைக் கெடுக்கும் கொடியோரிடமும், கற்பைக் கெடுக்கும் காமிகளிடமும், வாய்மை யில்லா வஞ்சகரிடமும், ஒற்றுமையைக் குலைக்கும் உலுத்தரிடமும், நீதி வழுவிய காதகரிடமும் எனது வீரச்சினத் தீ விரைந்து பாயும்!

**வேட :** நன்றுயிருக்கிறது! அதற்கு இந்த வேடம் போடுவானேன், சாம்பலைப் பூசுவானேன், சம்மணங் கொட்டுவானேன், தணலிடை நின்று தவம் புரிவானேன்? உமக்கு முக்தி சித்திக்குமா?

**விஜ :** கிராதற் கிறையே, யான் எனது முக்திக்காகத் தவம் புரியவில்லை. ஆன்மா நித்திய முக்தன். உலகெலாம் அரக்கமாயம் அழிநடம் புரிகிறது; நல்லோர் வருந்தினர்; பொல்லோர் வருத்தினர்; நய வஞ்சம் நாடாளுகிறது; நல்லறம் காடாளுகிறது; வாய் வாதாடுகிறது; கை சூதாடுகிறது; மனம் மாறுடுகிறது; சினம் போராடுகிறது; செல்வம் செருக்காடுகிறது; கொலை கூத்தாடுகிறது; கற்பு கலங்கி நிற்கிறது; நாணம் நடுங்குகின்றது; மங்கையர்மானம் மயங்கி நிற்கிறது; பூதேவியின் விழி புண்ணீர் வடிக்கிறது!

**வேட :** ஆம் ஐயா, இன்னும் நெடுக வெட்டுநடை யடுக்குவீர்; அப்படித்தான் உலகம் உள்ளது; அதற்கு நீரென்ன செய்யப்போகிறீர்?

**விஜ :** திரிபுரமெரித்த சிவன்கணை பெற்றுக் கண்ணன் எண்ணும் காரியம் முடிப்பேன். நெற்றிக் கண்ணன், நீலகண்டன், கரியுரி போர்த்தோன், காமனையெதிர்த்தோன், திரிபுராந்தகன், விரிசடைக் கடவுள், எரிசுடர் வண்ணன், அரவணி பூண்டோன், கங்கை வேணியன்....

**வேட :** போதுமையா நாமாவளி! நேரமாகிறது. ஆம் அரன், சிவன், அடியார்க் கெளியன், அருள் வடிவா

னேன், அம்பிகை பாகன் - அவனுக்கு என்ன வைத்திருக்கிறீர்? நீர் உள்ளத் துறவியா? கள்ளத் துறவியா?

விஜ :

கள்ளமொன் றில்லேன், ஐயா
  காவொன்றுங் கருத்தி லில்லேன்;
உள்ளநல் லாசை அங்ஙனல்
  ஓர் திவம் இழந்தான் சூதில்;
தெள்ளிய தொண்டர் தொண்டன்
  சிவனென திறைவன் அன்பு
வெள்ளமென் றறிவேன்; அப்பன்
  விருப்பமே யறிய வுள்ளேன்!

வேட : ஆ, ஆள் உள்ளே யிருக்கிறார்! சாமியார்க் கட்டை மாதிரி கிடைத்த இடம் சோறு சாப்பிட்டுக் கிடப்பார் என்றல்லவோ நினைத்தேன். ஐயா உமது சடையும், விபூதிப் பட்டையும், கண்ணும் பார்த்தால் கடுந்தவசியா யிருக்கிறது. நீர் உலர் சருகுண்டும், உடல் வற்றிலீர்; ஆளும் தோளும் வில்லுங் கணையும் பேச்சுங் குரலும் ஒரு வீரனைக் காட்டுகின்றனவே! உம் சின்னங்கள் ஒரு மன்னனைக் குறிக்கின்றன! கண்ணனைப் பற்றிப் பேசுகிறீர்! நீர் யார்?

விஜ : அறமும் பொறையும் உருவாய் வாய்ந்த ஐவரில் ஒருவன் யான்.

வேட : ஓஹோ, தெரிந்துகொண்டேன். நீர் பஞ்ச பாண்டவரில்....யார்?

விஜ : தருமருக்கு இளையோனான பீமனுக்கு இளையோன்.

**வேட :** ஓஹோ, விஜயனா? வாருமையா வாரும்! உம்மீது பலமான பிராது இருக்கிறது. இன்று உம்மை ஒரு கை பார்த்துவிடுகிறேன்! என் கையிலும் வில்லிருக்கிறது; என் தோளிலும் வலுவிருக்கிறது; நாவில் நியாய மிருக்கிறது.

**விஜ :** கிராதற் கிறையே! என்ன ஒரு மாதிரி பேசுகின்றீர்? நீர் என்மீது என்ன குற்றம் கண்டீர்? நீர் யார்? உம் மோடிருப்பது உம் மனைவியா? இருப்பதெங்கே? விவரமாகச் சொல்லும்!

**வேடன், வேடச்சி :** கேளும் எமது கதையை....நாங்கள் வெள்ளிமலைக் குறவர்.

உள்ளுருகும் அன்பர் தோழம் வெள்ளிமலைக் குறவர்
நாங்கள் - வெள்ளிமலைக் குறவர்!
உமையென்பார் சம்பு வென்பார்; ஒருபெயரும் இல்லோம்!
உள்ளத்தில் உள்ளபடி யுலகமெல்லா மிருப்போம்.
ஒருதொழிலு மில்லாமல் உலகையளித் தழிப்போம்!
விள்ளரிய பெரிய கதை; விளம்பரிதெம் மாடல்
மெய்த்தொண்டர்க் கேயெடுத்தோம் விதவிதமாய் வேடம்!
தெள்ளுதமிழ் நாட்டினிலே திருநடனம் புரிவோம்;
ஞானத் - திருநடனம் புரிவோம்!
*தேவாரம் பூண்டுதிரு வாசகத்தே னுண்போம்!
புல்லாக்கர் ஆணவத்தைக் கல்லியெறிந் திடுவோம்!
புலியுரித்தோம் கரியுரித்தோம் புரமெரியச் சிரித்தோம்!
முப் - புரமெரியச் சிரித்தோம்!
கல்லினையும் வில்லனைத்தோம், கங்கைமதி தரித்தோம்;

---

* தேவார திருவாசகங்கள் பிற்காலம் உண்டாயின. இங்கே இறைவனுக்குச் சூட்டும் பாமாலை வேதவாசகம் என்று பொதுப் பொருளிற் கொள்க.

கண்கொடுத்தோம் ; பண்கொடுத்தார் காதல்வினை முடித்தோம்
வல்லதிருத் தொண்டர்குலம் வழிதப்பிச் சென்றும்
வழிமறித்தே தடுத்தன்பு வலைவீசிப் பிடிப்போம்
அன்பு - வலைவீசிப் பிடிப்போம் !
எல்லாரும் எமையறிவார் ; எவருமறி யார்கள்.
இதயத்தைத் தொட்டறிவார் இல்லையென மாட்டார் !

**விஜ :** சிவனே, சிவனே, இதென்ன மாயம் ! இவ்வேடர் இப்படி உன் புகழைத் தம்புகழாகப் பாடுகின்றனர். இது நின் சோதனையோ? ஐயா நீர் வில் வேடரா அல்லது அருள் வேடனு?

**வேட :** முதலில் எமது வழக்கிற்குப் பதில் சொல்லு மையா ! உம்மேல் எமக்கிருக்கும் ஆத்திரம் தணியச் சிறிது பாடி யாடினோம்.

**விஜ :** ஐயா ! என் மீது என்ன வழக்கு ?

**வேட :** என்னவா? எங்கள் வேடர் குலமணியான ஏகலைவன் உமக்கு என்ன குற்றம் செய்தான் ?

**விஜ :** அவனுக்குத் துரோணர் வில்வித்தை பயிற்ற மறுத்தார்!

**வேட :** ஏனும் ?

**விஜ :** க்ஷத்ரிய வீரர் பயிலும் வில்வித்தையை வனவேடர் கற்றல் முறையாகாது என்றுதான்.

**வேட :** ஓகோ, கல்விக்கும் சாதி நிறத்தை ஏற்றுகிறீர் போலும் ! இயற்கைத் தாய் படைத்த மூங்கிலில் க்ஷத்ரிய மூங்கில், கிராத மூங்கில் என்றுண்டோ ? க்ஷத்ரிய

வில், கிராத வில் என்றுண்டோ? ஆயுதம் ஒன்றே யல்லவா?

விஜ: ஆம்.

வேட: எனின் உமது குருவுக்கு ஏனிந்தப் பாழும் சாதி வேற்றுமை? அந்த வில்லுத் தெறிக்கும் வித்தையை நீர்மட்டுந்தான் பயிலவேண்டுமா?

விஜ: மஹான்கள் நாலுமறிந்தே சொல்லியிருப்பார்கள்.

வேட: பேஷ். துரோணர் வெறுத்தாலும், சாதி முறை மறுத்தாலும், எங்கள் வேடர் சிங்கம் துரோணச் சிலையை குருவென வணங்கி, உன்னைத் தவிர வேறொருவருக்கும் பயிற்ருத வில்வித்தையைப் பயின்ருனல்லவா?

விஜ: ஆம், அவனுடைய ஏகாக்ரமும், அன்புறுதியும், விடாமுயற்சியும் அற்புதமானவை! யானே அறிந்த தைத் தானும் அறிந்து, நாயின் உடல் ஊடுருவக் கணை விடுத்துத் தனது திறமையைக் காட்டினுன்.

வேட: தனது ஏகாக்ரத்தால், தான் கற்ற வில்லறிவைக் காட்டினுன்—உமது குரு ஆச்சரியப்பட்டுக் குரு தட் சிணை கேட்டார்.

விஜ: ஆம்.

வேட: அதற்கு நீர் என்ன சொன்னீர்? ஹா! எனது அருமைச் சகோதரனுடைய கட்டைவிரலை யறுத்துக் கொடுக்கச் சொன்னீரல்லவா?

விஜ: ஆம். அந்த அன்பன் அவ்வாறே செய்தான்.

வேட : என் அப்படிச் சொன்னீர்? அவன் கற்ற வித்தை உருப்படியாகாமல் போகத்தானே? 'நான் க்ஷத்திரியன்' என்ற சாதிச் செருக்காலே தானே? நமது வித்தையை இவனறிவதா என்ற பொறுமையாலே தானே?

விஜ :...........உம்........

வேட : பெப்பப்பே! விழியும்! சொல்லும் பதில்! எனது சகோதரன் விரலில் வடிந்த இரத்தம் என் மார்பில் கொதிக்கிறது. ஆ........ அநீதி, அநீதி, அநீதி............ நீரோ தவம் செய்ய வந்துவிட்டீர்!

விஜ : ஐயா வீண் வாதம் பேசி எனது தவத்தைக் கெடுக்கிறீர்........

வேட : உள்ளத்தைச் சொன்னால் உடம்பெரிச்சல். உமது தவம் போதும்! பதில் சொல்லும்! முனிவன் பேச்சைக் கேட்டு எமது குல வேடன் விரலை அறுத்தீர். ஒரு நாள் தீக்கடவுள் கையிலே தேரும், வில்லும், காண்டீபமும் பெற்று என்ன செய்தீர்!

விஜ : காண்டவவனத்தை எரித்தேன். தீக்கடவுள் தீனி வேண்டு மென்றார்.

வேட : தீக் கடவுளுக்காக நாங்கள் வேட்டையாடும் பெரிய வனத்தை எரிப்பதோ? அதனால் எத்தனை உயிர்கள் வீணாக மாண்டன தெரியுமா? அத்தனை உயிர்களும் "பழி, பழி" என்று என்னுள் அலறுகின்றன.

விஜ : தீக்கடவுள் இச்சையைச் செய்தேன்—அவருக்கு ஆறாப் பசி யெடுத்தது.

வேட : ஆருப் பசி யெடுத்தால் உமது வீட்டில் தீவைப்ப துதானே ?

விஜ : வேடரே, எதுகைமோனையின்றித் தாறுமாருகப் பேசுகின்றீரே ! என் வீட்டிற்கே நான் எரியூட்டுவதா ! அதனுல் மக்கள் அழியமாட்டார்களா ?

வேட : மகாநீதியைக் கண்டாற்போலப் பேசுகிறீரே ! ஆயின் ஆயிரக் கணக்கான எமது சாதி வேடர் வீடு கட்டி வசித்த காண்டவவனத்தில் மட்டும் தீ வைக்க லாமா ? எமது வீட்டை எரிக்கலாமோ ? அதனுல் பல உயிர்ப்பழி சுமந்தீர்! வேட்டுவர்க்குத் துயர் விளைத்தீர்! ஏன் ? கையரிப்பாலே கணையறம் பிழைத்தீர் ! மல்ல றந் தவிர்த்தீர், வில்லறந் தவிர்த்தீர் !

விஜ : அக்கினி தேவன் ஆணையே செய்தேன்.

வே : அக்கினிதேவன் பெயரால் நீர் வைத்த தீ என் மனத்தில் வேகுதே ! அந்தப் பாவந்தான் உம்மை இப்படி நாட்டைப் பிடுங்கிக் காட்டிற்கு விரட்டி யடித்தது.

விஜ : அது எமது அண்ணலால் விளைந்தது.

வேட : நீர் மஹா யோக்கியரோ! ஏன் பார்த்துக் கொண் டிருந்தீர் ? உமது தருமர் மலை மலையாக நீதி பேசு வாரே ! அவர் புத்தி எங்கே போனது ? விதுரனின் மதுரமொழியும் கேளாமல், சூதின் தீதை ஓதியுணர்ந் தும், சதிகாரச் சகுனிக் கிணங்கி, எல்லாம் தோற்றுக் கானகமடைந்தார்.

விஜ : எமது அண்ணலை யிகழ்ந்தால் ஆத்திரம் கொதிக்கும்! ஏதோ வினையால் விளைந்ததைக் கொண்டு கேலி செய்யாதீர்!

வேட : உனது அண்ணல் பேச்சு இருக்கட்டும். அரசர்க்குரிய அறத்தைக் கேள்! செகத்திற்கு அரசர் சேவகர்; காவலர்; காக்கும் வீட்டைக் காவற்காரன் சூதாட்டத்தில் துணிந்து வைத்திழப்பதோ? அரசன் தருமகர்த்தா; ஆருயிர்க் கின்பம் ஆக்குவோர் அரசர்; பொதுநல மேன்மை புரிவோர் அரசர். பொய், கொலை, சூது,விபசாரம் கட்குடி—இவற்றைத் தடுப்பவர் மன்னர். அறிவும் அருளும் ஆற்றலுந் தவமும் வளர்ப்பவர் செங்கோல் மன்னர். பாரைப் பணயம் வைப்பவர் மன்னரா? மன்னர் கொண்ட மதி மயக்கென்னே? என்னே மன்னர் செருக்கு! உலகிற்குரியதை ஒருவன் அழிப்பதா?

விஜ : வேட்டுவ, நடந்துபோனதைக் கிண்டிக்கிளற வேண்டா! இனிவருங் காரியத்திற்கே இங்குச் சிவனருளை வேண்டுகிறேன்.

வேட : சிவனருளிருக்கட்டும்; எனக்குப் பதில் சொல்லு! சொல்லுக்குத் தோற்றால் வில்லுக்கு வா! எடு வில், தொடு கணை; கொடு போர்! சிவன் கணை பெறுமுன் உன்கணைத் திறங் காட்டு! நின்னை வில்லில் நிகரற்றவனென்று உலகோர் போற்றுவர். அதைப் பார்ப்போம்!

விஜ : அழைத்த போரைப் புரிவது கடமை. பாராய் வேட்டுவ, பகழியால் உனக்குத் தக்க மறுமொழி சாற்று

கின்றேன். வாதனையேனும், சோதனையேனும், எல்லாம் உன் செயல்—சிவம்! சிவமயம்! சிவோஹம்!

[வில் தெறிக்கிறான்]

**வேட:** இதோ உன் கணை அதமாகியது! விட்டேனா உன்னை! அன்பிற்கன்பு, அம்பிற் கம்பு....இதோ பார்!

[அம்பு பொழிதல். இருவரும் பலமாகப் பாய்ந்து பாய்ந்து போர் புரிதல். இச்சமயம் அடியில் வரும் பாட்டைப் பின்னால் பாடிக்கொண்டே யிருக்கவேண்டும். அதற்கேற்றபடி இருவரும் குதித்துப் போர்புரிதல் வேண்டும்.]

அம்படி பட்டுந்தன் அம்படி யார்க்கு - நல்
இன்ப மளித்தவன் சம்பு சதாசிவன்!
நம்பிப் பணிந்தவர் தம்பணி யேற்ற - நீ
கம்பான் எம்பான் சம்பு சதாசிவன்!

**வேட:** ஆம் அம்பிற்கும் அன்பளிப்பவன் அரன்; இதோ பார் உன் ஆணவம் அழியும் அம்பு!

**விஜ:** ஓம் சிவாயநம! சிவோஹம், சிவமயம்! அதோ உன் கொண்டையிறகு மண்ணைக் கௌவியது!

**வேட:** இதோ உன் மண்டைக் கருவம் மண்ணைக் கௌவியது. உன் அம்புகளை ஒடித் தெறியுது பார் எனது!

**விஜ:** ஆ என்ன ஆச்சரியம்! நாம் குறிவைக்கும் கொடிய அம்புகள் இவனைத் தொடவில்லையே! இவன் அற்புத வீரனாகக் காண்கிறானே! இவன் முன் என் மதி

மயங்குகிறதே! இருப்பினும் தொடுத்த போர் நடக்கட்டும்.

**வேட:** என்ன ஆகாயத்தைப் பார்த்து நிற்கிருய்? உன்னைப்பார், என்னைப்பார்! பார், உன் உடலைப் பிளக்கிறேன். இந்தக் கணைக்குப் பதிற்சொல்!

[கணைகள் பொழிகிருன். விஜயன் சோர்வடைகிருன்.]

**விஜ:** ஆ! சோர்ந்தேன்! சோர்ந்தேன்! இக்கணைகளுக்கு எதிர்க்கணை யற்றேன்! புண்ணுற்றேன்! தோற்றேன்....சிவோஹம், சிவமயம்! சிவமயம்! சிவமயம்!

**உமையாயி:** (செவிக்குள்) நாதா துன்புறுகிருன்; சோதனை போதும்; அன்பனுக்கு அருளுக!

**வேட:** சக்தியே, நான் விடும்கணை அன்புக்கணை; அவன் பொழியும் சிலைமாரி மலர் மாரி. இன்னும் அரை நாழிகை வேடிக்கை நடத்தி நம்மை விளக்குவோம்.

**உமை:** நாதா, நாழிகையாயிற்றே!

**வேட:** இத்தனைக் கடுந்தவத்தால் அன்பு செய்த இவ்வீரக் குழந்தையுடன் இரண்டு மூன்று நாழிகை நேரமாவது விளையாட வேண்டாமா?

**உமை:** திருவுளம் நடக்கட்டும்!

**சிவன்:** இதோ, ஒரு அம்பு! பட்! உனது நாண் அற்றது!

**விஜ:** வில் நாண் அற்றது! ஆண்மையும் நாணும் உள்ளது. உயிர் போனலும் வீரம் போகாது. இதோ பார்! அம்பிற்குத் தப்புகிருய்; வில்லினல் புடைக்கிறேன்!

ஓம்நம : சிவாய வோம்! ஓம் நம : சிவாய வோம்!

[வேடனை வில்லாலடித்தல்]

**உமை :** நாதா தங்கள்மீது விழுந்த அடி என் மீதும் பலமாக விழுந்ததே!

[விண்ணில்] ஆ ஆ! எங்கும் நிறைந்த சதாசிவன்மேற் பட்ட வில் எங்களை யெல்லாம் வருத்துகிறதே! கணநாதர், சித்தர், விபுதர், சிவயோகிகள், ஐம்பூதவுடல் கொண்டுலவும் உலகோர் அனைவரும் இவ்வில்லடியை யுணர்ந்து அலறுகின்றனரே, சிவனே சிவனே!

**விஜ :** இதென்ன அசரீரி!

**வேட :** என்னுடலான ஆருயிர்காள், தேவர்காள், பாருங்கள் விளையாட்டை........!

அது கிடக்கட்டும்........இவ்வில்லடி சும்மா போகாது; உன்னைச் சக்கை பிழிகிறேன். வா, கைகலந்து பார்ப்போம்! சொல்லமர், வில்லமர் முடிந்தது; இனி மல்லமர் புரிவோம் வா!

**விஜ :** சம்மதம். ஓம் சிவாயநம!

புவியெலாம் சிவமயம். நவமெலாம் சிவமயம்.

[மற்போர் நடக்கிறது]

**வேட :** வீரப்பந்தே, உன்னை விண்ணில் எற்றுகிறேன்—பார் என் விளையாட்டை!

[விஜயனை யெற்றுகிறான். விஜயன் துள்ளி மேலே செல்ல, வேடன் திடீரெனப் பேரொளி வீசி மறைதல்]

## காட்சி உ. சிவாஸ்திரம்

[பார்வதியும் பரமசிவனும் ரிஷபாருடாராகத் தரிசனம் கொடுத்தல். விஜயன் பேரானந்தச் சிலிர்ப்புடன் வணங்குகிறான்.]

**விஜயன் :**

கொடியரிற் கொடியேன்; கொடும் பிழை செய்தேன்
கொழுஞ்சுடர்க் குணமணிக் குன்றே!
படியெலாம் பரவும் பரமனே, யிந்தப்
பதங்கெடு பாவியேன் வில்லால்
அடியது பட்டும் அருளமு தளித்தாய்,
அப்பனே யொப்பிலாக் கருணை
வடிவனே, யன்பர்க் கெளியனே யென்னை
மன்னிப்பாய் பார்வதி-சிவனே!

முதல்வனே, இறைவனே, அப்பனே, அன்னையினும் அன்பனே! நினக்கே தவம்புரிந்தேன்—நாயினும் கடையேனாகிய எனக்கருள்புரிய அம்மையுடன் வந்த நினக்கே அவம்புரிந்தேன்! என்னாண்டவனே, நினக்காகத் தவம் பூண்டவன், நின்னடியேன், எல்லாம் சிவமயமெனக்கண்டும், சிவமேயான நின்னை வில்லால் தீண்டியடித்தேன், கடையேன் கொடியேன். என்னப்பா, பூமேனி நொந்ததோ! என்னை மன்னித்தருள்! அம்மை யப்பனே, நின்னடியே கதி. ஓம் சிவம்! ஓம் சிவம்!

செப்பரும் பிழைகள் செய்தனன்; எல்லாம்
செய்வினை யாட்டேனைப் பொறுத்தாய்;
அப்பனேன் எனையும் ஆட்கொள வேண்டி
அருள்வடி வெடுத்தடி நடந்தாய்!

ஒப்பிலாக் கருணை வெள்ளமே, உள்ளத்
துவட்டுறு தினித்திருங் கரும்பே!
அப்பனே வணக்கம், அம்மையே வணக்கம்
அன்பழ தின்பமேயீர் சிவமே!

என்னுள்ளும் புறமும் யாவுமறிந்த அறிவொளியே, திட்டினேன், வைதேன், கொட்டினேன், எற்றினேன்—பாவியேன் அறிவிலி! என்னையும் ஆண்ட அன்புப் பெருக்கே உன்னடி புகுந்தேன்.

(பூரி கல்யாணி)

பற்றினே னுன்றன்
பாதப் போதினை
பற்று வேறிலேன்
பார்வ திபதே—நம:
பார்வதிபதே

[வணங்குகிறான்]

சிவன்: அன்பா, இன்பா! எழுந்திரு! உன் அரிய தூய மாதவத்தை மெச்சினோம். நின்னைக் காக்கவும் நினக் கருள்புரியவும் விரும்பி வந்தோம்.

விஜ: உய்ந்தேன் உய்ந்தேன்! சிவமே, அமுதே, இன்பமே, அன்பே, அருளே, உய்ந்தேன்! நம: பார்வதி பதயே—ஹரஹர மஹாதேவ! என்னம்மையப்பனே, இந்தக் கிராத வேடம் பூண்டதேன்? அருளாண்டவனே............!

சிவன்: அன்ப, உலகை அசுர சக்தி யாளுகிறது; அதை யடக்க ருத்ர சக்தி வேண்டும்; அதைக்கொண்டு கண்ணன் எண்ணம் நிறைவேறும். அதற்கென நீ உதித்தாய்; என்னன்பனே, அந்த அசுரச் சுயோத

னன் மாயச் சூதாடி உங்களைக் காட்டிற்கு ஓட்டிய துடன் நிற்கவில்லை. உங்களைக் கொல்ல ஒவ்வொரு நாளும் சூழ்ச்சி செய்கிறான். இறைவனருளால் உங்கள் தர்ம பலத்தால், தீங்கில்லாமல் இருக்கிறீர்கள்; இருப்பீர்கள்! நீ இங்கு என்னை நோக்கித் தவம் புரிவதைக் கேட்டவுடன் உன்னை அப்படியே கடித்து விழுங்குவதற்கு இதோ இந்தப் பன்றி யுருக்கொண்ட மூகாசுரனை யனுப்பினான் துரியோதனன். இப்பேயரக்கன் நினக்குத் தீங்கு செய்தேயிருப்பான். அதையறிந்தே, யானும் எனது பரதேவியும் பூதகணங்களுடன் கிராத வேடம் பூண்டு இங்குற்றோம்; உடனே அப்பன்றியைக் கொன்றோம். எமது அன்புக் குழந்தையே, பிறகு நிகழ்ந்ததெல்லாம் எனது ஆடலென்றறிவாய். அன்பா, உனது பூமேனி புண்ணானதோ? [தடவிக் கொடுத்தல்] எனக்கினியோய், உனது ஒளி பெருகுக! உன் தவம் பலித்தது. அன்பு வென்றது. சிவ மந்திரம் சித்தி பெற்றது. விஜயா விஜயீபவ!

வெற்றி வெற்றிமேல்
வெற்றி யோங்குக!
சுற்று முன்னிசைச்
சுட ரோளிர்கவே!

விஜ: பரமா, பரமா, என்ன அன்பு என்ன, அன்பு! நின்னை வைதேன்; நின்னொடு பொருதினேன்! கனலார் மேனியிற் காலையும் வைத்தேன்—என் பிழை பொறுத்தாய்! என்னை யாட்கொண்டாய்! அன்பே சிவம் என்பதை அறிந்தேன், அறிவேன், அறிந்தேன்!

சிவன்: அன்பனே நீ அன்பு; நின்வில் அன்பு; நின் அம்பு அன்பு; உன் அடியும் அன்பு, நான் அன்பு;

அன்பே நின்னை யணைந்துகொள்ளவே நின்னுடு மல்லாடினேம் ;

அன்பு செய்தனே—
அன்பி னெய்தனே
அன்பி னுய்தனே—
அன்பு வாழ்கவே !

அன்பனே இனி உனக்கு வேண்டிய வரங்களைக் கேள் !

விஜ : அருட்சிவனே, சக்தி மஹேசனே ! உலகில் அசுர மாயம் தாண்டவமாடுகின்றது. அறவோர் வருந்து கின்றனர் ; அரக்கர் ஆளுகின்றனர். துரியோதனன் கொடுமை திருவுளமறிந்ததே. கண்ணன் கருத்தும் அண்ணல் அறிந்ததே. எமது வனவாசம் முடிந்த தும், அவன் இருக்க இடங்கூடத் தர மறுப்பான். உடனே பாரத யுத்தம் நிகழும். அது எம்பெருமான் இச்சை. நினது அருள் வல்லமையாலேயே எளி யோம் அப்போர்க் கடல் கடக்கவேண்டும். அதற்கு நின்கை வாளியே படகு. இறைவனே, பசுபதியே, அரக்கரை யெரிக்கும் திறம்பெற்ற சிவாஸ்திரத்தை அருளுவாய் ! அறப்போர் வெல்ல உன் அம்பை யரு ளாய் ; காதகர் அழியவுன் கணையை யருளாய் ; நல் லோர் வாழவுன் நற்கணையருளாய்; பொல்லோர் வீழ வுன் பொற்கணை யீவாய் ; அத்துடன் யானும் உல கும் உய்யும் வழியும் உரைத்தருளுளாய் !

நலமேலாந் தரும்—சக்தி
நமச்சி வாயவோம் !
பலமேலாந்தரும்—உமா
பதிசி வாயவோம் !

சிவன் : தந்தோம் வரம்! அன்ப, இதோ பாசுபதம் என்னும் சிவாஸ்திரம்! உனது அன்புக் கையில் இப்பொற்றாணியுடன் பாசுபதாஸ்திரம் தந்தோம்! [தருதல்] இதன் வல்லமை மிகப்பெரிது. இந்தத் தெய்வக்கணை மூன்றுலகையும் வெல்லும்; நினைத்த மாத்திரத்தில் இது கணக்கற்ற தீச்சுடர்க் கணைகளாகப் பரந்து விரிந்து பாய்ந்து பகைவரைக் கொல்லும். வீரர் வீரனே, நீயே இக்கணையை வகித்தற்குரியன். பாசுபதாஸ்திரம் பாரதம் வெல்க! அரன்கணை அரக்கரைக் கொல்க! இதை மறவலியரக்கர் மீதே செலுத்துவாய்; அறம் வாழுவே யிவ்வம்பை விடுவாய்! அன்பனே, இவ்வம்பிற்கு ஒரு மந்திரம் உண்டு. அதையும் உபதேசிக்கிறேன். "ஹர ஹர மஹாதேவ"—இதுவே மந்திரம். இம்மந்திரத்திற்கு அரக்கரையழிக்கும் வலிமையுண்டு. இதை மனத்தில் உச்சரித்து அம்பைப் பிரயோகித்தால் குறி தப்பாது; வெற்றி உறுதி!

விஜ : ஹரஹர மஹாதேவ........

[வணங்கல்]

சிவன் : அன்ப, உலகம் என் அருள் விளையாடும் சோலை. யான் உள்ளமெல்லாம் இருக்கிறேன், என்னை யார் உள்ளமாகிய தகர நிலயத்தில் எப்போதும் திருநடம் புரியும் கனல் வடிவாக தியானித்துக் காண்கிறார்களோ, அவர்கள் உலகெலாம் என் கோயிலெனக் காண்பர். உயிரெலாம் எனது திருமேனியென்றறிவர். அத்தகையோருக்கு அன்பும் இன்பமும் வற்றாக் கடலாக வளரும். சிவாயநம: என்று சிந்தித்து சிவோஹம் என்று அனுபவித்து, சிவமயம் என்று

என்னை எங்கும் காண்க! எனது அருட்சக்தியால் எல்லா நலமும் உண்டாகும்! அழகு, அமைதி, இன்பம், அன்பு, ஒற்றுமை, செல்வம், அறிவு எல்லாம் உள்ளத்தில் 'ஓம் சிவம்' என்று நினைவாருக்குத் தாமே எய்தும். அன்பால் அணைக; அருளால் அறிக; அறிவால் இன்புறுக!

விஜ: தேவதேவனே; தங்கள் திருக்கரத்தால் இப்பொற்றூணியும், இச்சிவக்கணையும், தங்கள் திருவாக்கால் சிவமந்திரமும் பெற என்ன தவம் செய்தனன்! உய்ந்தனன், இறைவா!

தடைக்குலம் விழத் தருமமே வாழத்
 தந்தனை சிவக்கணை! நம்மைக்
கொடுக்குமெய் யன்பர்க் கனத்தையுந் தனையுங்
 கொடுத்திடும் வள்ளலே, அடியேன்
விடுக்கில னுனது விரைமலர்ப் பாதம்;
 விடுத்திடி னுய்வுவே றில்லேன்;
அடைக்கலம் அரனே, அடைக்கலம் அரசே
 ஹாஹா ஹரமஹா தேவா!

சிவன்: அன்பர் வாழ்க!

சிற்சபை யுள்ளம்; ஆங்கே
 திக ழொளி யிறைவன்; அன்பே
அர்ச்சனை; ஆர்வங் கங்கை;
 யாவரும் பூசை செய்மின்!
சிற்சக்திக் காந்தம் வீசும்!
 சிவோஹம் சிவோஹம் என்னும்
கர்ச்சனை யுடனே யின்பக்
 கடலெழும்; அமுத முண்டாம்!

அன்பு வாழ்க! அன்பர் வாழ்க! அன்பா, இனி நாம் கைலை செல்கிறோம்!

[உடனே மறைதல்]

விஜ: ஹர ஹர மஹாதேவ! அருளே போற்றி! அரனே போற்றி! இருள் கடிந்துள்ளே யிலகுவாய் போற்றி! அறிவே போற்றி! அமுதே போற்றி! இறைவா போற்றி! இன்பா போற்றி!

[பணிகிறான். விமானத்தினின்று இந்திரன் இறங்கல்]

இந்திரன்: என்னருமை மைந்த! உன் வெற்றி உண்மை வெற்றி; உலக வெற்றி; தருமவெற்றி; கண்ணன் கருதிய கருமவெற்றி! வா, என் செல்வா! கடுந்தவம் புரிந்து உடலிளைத்தனை. எனது தேவலோகத்திற்கு வா! ஏறு விமானத்தில்! அங்கே சிவன் கணைக்கும் வேலை யுள்ளது. காலகேய நிவாத கவசர் என்னும் அரக்கர் தேவரை யழிக்கச் செருக்குடன் எழுந்தார். அவர்கள் உருத்திரன் கணையை உருசி பார்க்கட்டும்! வாராய், என் வீரக்காதல! ஏறு விமானம்!

விஜ: தந்தையே வணக்கம்! தங்கள் ஆணைப்படி விமானமேறினேன்; வனத்தில் எனது அருமைச் சகோதரருக்கு நற்செய்தியை அறிவிக்க வேண்டும்.

இந்: உடனே அறிவிக்கின்றேன். நீ வா!

விஜ: சிவோஹம் சிவோஹம்! ஹரஹர மஹாதேவ!

[விமானம் மேலே செல்லல்]

## காட்சி ௬. ஊர்வசி நடனம்

[இந்திர சபை. இந்திரனுடன் விஜயன் அரியணையில் விளங்குகிருன். தேவர் சூழ்ந்திருக்கின்றனர். அரம்பை, திலோத்தமை யாழுடன் பாடுகின்றனர். ஊர்வசி நடனமாடுகிருள்.]

**அரம்பை, திலோத்தமை, ஊர்வசி :**

இராகம் தோடி] [ஆதிதாளம்

பல்லவி

காமிகள் ஆவோம் வாரீரே—பரமசிவ
காமிகள் ஆவோம் வாரீரே !

அனுபல்லவி

'நாம்' எனும் ஆணவ மாயத்தை நலித்தே
'நமசிவாய ஓம்' என்று நாமத்தை ஜபித்தே (காமி)

சரணம்

தீயெழச் சிரித்தவன் திரிபுரத்தை யெரித்தான்.
தில்லையில் தூக்கிய திருவடியை யளித்தான்.

தாயென முன்வந்து நேயரைத் தடுத்தாண்டான்.
தாருகர் செருக்கினைத் தகர்த்து வெற்றி கொண்டான். (காமி)

ஆடலாய் உலகெல்லாம் அருளினுல் ஆக்கினன் ;
அன்பரை மேன்மேலும் இன்பத்தில் ஊக்கினன்.

வேடனுய் விளையாடி வில்லடியும் பொறுத்தான்
வேதகானத்தைக் கேட்டு வேண்டும் வரமளித்தான். (காமி)

மாதவக் கௌரியைத்தன் பாதியாகக் கூடினான்
மார்க்கண்டே யனைக்காக்க மறலியைச் சாடினான்.

பாதம்வைத் தென்னுள்ளம் பரவசக் கூத்தாடினான்
பார்த்தனுக்குப் பாசு பதமளிக்க ஓடினான். (காமி)

**இந்திரன்:** ஆட்டம் நன்று. ஊர்வசி, இந்தா மாலை! இனி உங்கள் இடத்தில் அமருங்கள்.

[மாலைபெற்று அமர்கின்றனர்]

தேவர்காள், இன்று நன்னாள். சிவாஸ்திரத்தின் பெருமை உடனே விளங்கியது. நம்மை நெடுநாளாகத் துன்புறுத்திய காலகேய நிவாதகவசர் காண்டீபத்தின் டங்காரம் கேட்டதுமே கலங்கினர். பாசுபதாஸ்திரம் பறந்ததுமே இறந்து வீழ்ந்தனர். இதுபோலவே சிவாஸ்திரம் பாரதப்போரையும் வென்று அதர்மக்கும்பலை அழிக்கும்; தருமத்தை நிலைநிறுத்தும்! சிவாஸ்திரம் பெற்று இன்று தேவருக்குதவிய விஜயன் இதோ கண்ணனுக்குதவச் செல்லுகிறான். விஜயா, என் அருமைப்புதல்வா, வீரர்சிங்கமே! நீ யுகந்தோறும் கண்ணனுடன் அவதரிக்கிறாய். முற்பிறப்பில் நீ அரிய தவங்களைச் செய்தவன். அதனாலேதான் இப்போது யாருக்கும் அரிய மாதவம் புரிந்து, மஹாதேவன் அருளையும் அம்பையும் அன்பையும் பெற்றாய். மைந்தா! இதோ உனக்கு வைஜயந்தி மாலை சூட்டுகிறேன். நீ அறக்காவலனாக வெற்றிவீரனாக நீடுழி வாழ்ந்திரு!

**தேவர்கள்:** வீரவிஜயன் வெல்க! சிவனருள் பொலிக! ஹரஹர மஹாதேவ!

**விஜயன்:** தந்தையே வணக்கம், தேவர்காள் வணக்கம்! செய்வதெல்லாம் சிவன் செயல். காலகேயநிவாத கவசரைக் கொன்று உங்களுக்கு அமைதியளித்தவன் சிவனே. நான் அவன் ஆயுதம். அவனன்பைக் கொண்டு அவன் நாமத்தைச் சொல்லி, அவன்தந்த அம்பை விடுகிறேன். மற்றதெல்லாம் அவன் செயல். இனிப் பூலோகத்தில் உள்ள காலகேயரான துரியோத னுதிகளின் அக்கிரமத்தை ஒழிக்கவும், கண்ணன் அவதாரகாரியம் நிறைவேறவும் சிவபெருமான் அளித்த அம்பே துணே. அவன் அருளே துணே. தந்தையே, தேவர்காள்! இனி விடைபெற்றுக் கொள்ளு கிறேன். எனது சகோதரர் வனவாசம் செய்கிறுர் கள். அவர்களுக்கு நான் காவலாயிருப்பது கடமை.

**இந்திரன்:** அன்பா, மைந்தா! இன்று இங்கே தங்கி, நாளே எனது விமானத்தில் புறப்படலாம். தேவர்காள்! காம தேனுவை அமுதம் பரிமாறச் சொல்லுங்கள்! எல்லா ரும் விஜயனுடன் அமுதம் உண்போம்.

[திரைக்குப்பின்னுல்]

**காமதேனு:** தேவர்கள் அமுதமுண்ண வரலாம்!

[எல்லாரும் செல்லல்]

[* ஊர்வசி விஜயனேக் காதலித்து வற்புறுத்துகிருள். விஜயன் வைராக்கியமாக மறுக்கவே, 'அலியாகக் கடவது!' என்று சாபமிடு கிறுள். இச்சம்பவம் இந்நாடகப் பொருளுக்குப் புறம்பானதால் விடப்பட்டது.]

### காட்சி ச. வெற்றி

[வனம். கண்ணன் புல்லணையில் அமர்ந்து தியா னிக்கிறுன்; வியாசர் பக்கத்தில் அமர்ந்திருக்கிறுர். தரு

மர் பக்கத்தில் நிற்கிறார். விஜயன் சிவாஸ்திரத்தைக் கண்ணனுக்குக் காட்டுகிறான். பீமன் விஜயன்பக்கத்தில் நிற்கிறான். நகுலசகாதேவர் மலர்தாங்கி நிற்கின்றனர். பாஞ்சாலி புன்னகைபுரிந்து நிற்கிறாள்.]

**விஜயன்:** கண்ணா, உனது காரியத்திற்கு வந்துவிட்டேன். குருதேவ, இதோ தாங்கள் உபதேசித்த சிவமந்திரத்தால் சிவாஸ்திரம்பெற்று இந்திரனுக்கும் தொண்டு செய்து வந்தேன்.

**வியாசர்:** ஆம், சிவாஸ்திரத்தின் சுவையை அரக்கர் அறிந்தனர். இதைக்கண்டு அதர்மம் அஞ்சியோடும். அன்பு மணியே நீ வீரன்! விரதன்! விஜயன்! விஜயனுக்கு வெற்றி!

**எல்லாரும்:** விஜயன் வெல்க! சிவனருள் பொலிக!

**கண்ணன்:** அன்பர்காள் இன்றே பாரதப்போர் வந்தது. உங்கள் பொறுமை வென்றது. அறம் நின்றது. இன்றே கௌரவக்கும்பல் சாய்ந்தது. இனி நடப்பதெல்லாம் எனது காரியம். சிவம் வாழ்க! சிவாஸ்திரம் வாழ்க! சிவனருள்பெற்ற தவம் வாழ்க! தனஞ்ஜய விஜயன் வாழ்க! இறைவனுக்கே வாழ்வை வேள்வியாக்கிய அன்பர் வாழ்க!

**எல்லாரும்:**

வெற்றி வெற்றி வெற்றிவீர விஜய னுக்கு வெற்றியே!
சுற்றி யெம்மைக் காக்குங் கண்ணத் தோழனுக்கு வெற்றியே!
பற்று மன்பர் பற்ற றுக்கும் பரமனுக்கு வெற்றியே!
நற்றவர் புகழுந் தொண்டர் நாதனுக்கு வெற்றியே!

சிவாஸ்திரம் முற்றிற்று.

---

# சமயசாரம்

1. உலகில் பல சமயங்கள் வழங்குகின்றன. அவற்றுள் வேதாந்தம், சித்தாந்தம், வைணவம், பௌத்தம், சமணம், சாக்தம், சீக்கியம், ஜரதுட்டிரம், யூதம், கிறித்தவம் ஆகியவை முதன்மையானவை. இவற்றைச் சமரஸப் படுத்தப் பிற்காலம் பிரமஞானம், சமரஸ சன்மார்க்கம் முதலியவை எழுந்தன. ஆரிய சமாஜம் போன்ற சீர்திருத்தச் சமயங்களும் எழுந்தன. சுத்த சன்மார்க்கம் அனைத்திற்கும் பொதுவாம்.

2. எல்லாச் சமயப் பயிர்களும் வளரும் நிலம் ஒன்றுதான். அதுவே அருளறிவு. நமக்குள் உயிர்க்குயிராக ஒரு பொருள் இருக்கிறது. அதை ஆன்மா, இதயப் பொருள் என்று பலவாறு சொல்வர். சென்னையில் உள்ள ரேடியோவை இயக்கும் ஆகாய மின்சாரமே திருச்சி ரேடியோவையும் இயக்குகிறது. எல்லா ஊர்களிலும் உள்ள யந்திரங்களில் இறங்கி வேலைசெய்வது எல்லையற்ற ஆகாய மின்சாரமே. அதுபோல ஒவ்வொருவர் உள்ளத்திலும் குடிகொண்டு உடலை இயக்குவதும், உலகையே இயக்குவதும் ஒரே திருவருள் மின்சாரந்தான். அந்த மின்சாரத்தை உடலில் சுத்தான்மா என்கிறோம், உலகில் விசுவாத்மா என்கிறோம்; இரண்டையும் கடந்து தானே தானாகப் பரந்து விரிந்த நிலையில் பரமாத்மா என்கிறோம்.

3. எல்லாச் சமயங்களும் உள்ளத்தில், உலகில், விண்ணில் எங்கும் நிறைந்த பரமாத்ம சக்தியையே நாடும்.

4. பரமாத்மா சுத்தன், கட்டற்றவன், சர்வசாட்சி. அவனுக்கு எதையும் ஈடாகச் சொல்லமுடியாது. அவன் மஹாதேவன், சர்வாந்தர்யாமி, உலகநாதன், உயிர்க்கிறைவன். மனிதனுடைய சிற்றறிவிற்கு எட்டாத சிறப்புடையவன். அவன் அருளே இயற்கையாக விளங்குகிறது.

ஜீவகோடிகளாக நடமாடுகிறது. அவனருளே அறிந்தே அவனை அறியமுடியும். அதனால், அவனை அருளுடன் சேர்ந்து சுத்தசக்தி, சிவசக்தி, பிரம்மசக்தி என்று தியானிக்கவேண்டும்.

5. சுத்தசக்தி எங்கும் பரந்து எல்லையற்றிருக்கிறது. எல்லாம் சுத்தசக்தி விளக்கம். நமது உள்ளத்தில் எந்தச் சுத்தசக்தி உள்ளதோ அதுவே சூரியனிலும் உள்ளது. உலகையெல்லாம் கோயிலாகவும், உள்ளத்தையே சந்நிதியாகவும் அங்கு "நான் நான்" என்று நடமாடும் சுத்த சக்தியை அருளிறைவனாகவும் தியானிக்கவேண்டும்.

6. எல்லாரும் சாதனத்தால் உள்ளப்பொருளான சுத்தசக்தியை அடையலாம். அந்த அடைவிற்குத் தடையாயிருப்பது மனப்பாசந்தான். மனம் ஆசை ஆணவமாய வடிவு. அதில் பல பிறவிகளாகக் களிம்பேறி யிருக்கிறது. அக்களிம்பை நீக்கச் சுத்த சாதனம் வேண்டும்.

7. சுத்தசாதனமாவது 'நான் சுத்தான்மா, சுத்த சக்தி என்னுள் உயிர்க்கிறது' என்னும் நினைப்பு; இதயத்தையே இறைவன் உள்ளுறையாக உணர்தல்; உலகெல்லாம் அவன் கோயிலாகக் காணல்; தன்மயமாக அனைத்தையும் அனைவரையும் மதித்தல்; அன்பு, அருள், வாய்மை, தூய்மை, பண்பு, ஒப்புரவு, சித்தவைராக்கியம், சமநோக்கம், ஆத்மசுதந்தரம், இன்ப உணர்ச்சி - இவற்றை வளர்த்தல்; பிழைகளைக் கண்டு திருத்தல், நல்ல நூலாராய்ச்சி; காமக்குரோதாதிகளை அடக்கியாளுதல், காலைமாலை ஒரு மணிநேரம் ஜபம்; தியானம், வழிபாடு, அருட்பணிகள் முதலியவையாம். இவை பொதுவாக எல்லாச் சமயங்களுக்கும் ஒத்த கோட்பாடுகளாம்.

8. உருவணக்கம், உருவுள்ளும் உள்ள சைதன்யத்தையே வணங்குவதாகும். நாம் ஒருவரை நமஸ்கரிக்கும் போது, உடலையன்று, அவ்வுடலுட் கோயில்கொண்ட உள்ளத்தானையே வணங்குவதாகும். சிரத்தையுடன்,

பிறருக்குத் தீங்கில்லாமல் யார் எந்த வழியில் இறைவனை உபாசித்தாலும் நாம் நன்குமதிக்க வேண்டும். சிலர் விபூதி குங்குமம் சந்தனம் இடுகின்றனர். இக்குறிகள் புருவநடுவில் ஆக்ஞாசக்கரத்தில் உள்ள ஆன்மவொளியைக் குறிக்கவே இடப்படுகின்றன. சஹஸ்ராரத்தில் மஹா குண்டலியாக உள்ள சுத்தசக்தியைக் குறிக்கவே நெற்றி யில் குறி யிடப்படும். பொருளறிந்து சமயாசாரங்களை அனுட்டிப்பவரை நாம் மதிக்கவேண்டும், இகழக்கூடாது.

9. மனம் வசப்பட்டால், சித்தம் நிலைத்தால், ஆணவம் அடியோடு அகன்றால், புத்தி உண்மையைப் பகுத்தறிந்தால், உள்ளம் அருள்மலர்ச்சி பெற்றால் சுத்தான்ம சித்தி உண்டாகும்; அதனால் இறைவனையும், அவனருள் உலகில் விளையாடுவதையும், அனைத்தும் அருள்மயமா யிருப்பதையும் நாம் நேரே காணலாம். அவரவர் பக்குவத்திற் கேற்றபடி இக்காட்சி விளங்கும்.

10. அன்பு, அருட்பணி, ஒழுக்கம், ஜபம், தியானம், விரதம், தவம் எல்லாம் படிப்படியாக மனிதனை மாசறுத்து உள்ளப்பொருளை விளக்கும் உபாயங்களேயாம். அவரவருக்கு எளிதான வழியைப்பற்றி வைராக்கியமாகச் சாதனை செய்து முன்னேறவேண்டும். பிறரை நோக்கிக் குற்றம் காணும் கண்ணை உள்ளே திருப்பி நம்மையே நோக்கி நமது குற்றங்களைக் கடிந்து, நமது சுத்தான்மாவைக் கண்டால் அக்காட்சி சர்வாத்ம சித்திக்கு வழி காட்டும். பிறகு உலகெல்லாம் ஒருமயம் தோன்றும். உள், உலகு, வான் இம்மூன்றிலும் நிறைந்தபொருள் சுத்தசக்தி அல்லது சிவசக்தி, பிரம்மசக்தி என்போம். அதன் அடைவே ஆனந்தமாம். அதை யடையுமட்டும் யாருக்கும் இன்பமில்லை.

11. எல்லாரும் அப்பொருளை அடைந்து பேரின்ப வாழ்வு பெறுக! இன்பம் எல்லாருக்கும் பொதுவுரிமை யாம்.

ஓம் சுத்த சக்தி

சுவாமி சுத்தானந்த பாரதியார்

இயற்றிய

# யோக சித்தி

புத்தகப் பெயரைக் கண்டு மலைக்காதீர்கள்! அழகும் இன்சுவையும் பொருந்திய இந்நூல் மனித வாழ்க்கையைச் செம்மைப்படுத்தி வையத்தில் வாழ் வாங்கு வாழும் வகையை எளிதிற் கற்பிப்பதாகும்.

யோக சாதனங்கள் மட்டுமன்றி பல சமய உண்மைகள், சமுதாய முன்னேற்றம், வாழ்க்கை நெறி ஆகியவற்றைப் பற்றிய பல அரிய பெரிய கருத்துக்கள் இதன்கண் அடங்கியுள்ளன.

அடிகள் தமது பரந்த நூலறிவாலும் அநுபவத்திலுங் கண்டறிந்த உண்மைகளைப் படிப்போர் உள்ளத்திற் பதியும் வண்ணம் எழுதியுள்ளனர்.

தமிழ் நாட்டினருடைய வாழ்க்கையைப் பயன் பெறும்படி செய்வதற்கும் தமிழ்நாட்டினருடைய அறிவை மலரச் செய்வதற்கும் அமைந்த நூல் இதுவே.

**விலை ரூ. 2-8-0**